# மிகப் பொருத்தமான ஜோடி

## இந்தியாவின் ஒரே துர்நாற்றமகற்றும் சோப் மற்றும் டால்க்

துர்நாற்றத்திலிருந்து உங்கள் உடலுக்கு
இரட்டை பாதுகாப்பு. சிந்தால் சோப் குளியலும்
பின் சிந்தால் பவுடர் தூவலும்—ஆகா!
புத்துணர்ச்சியின் புதுச் சிகரத்தில்
நீங்கள் இருப்பீர்கள்!







**கோத்ரெஜ் வழங்கும் சிந்தால்**

# Kalki Shopping Page

## Buy your Suvega





**Reliance Motor Company (P) Ltd.**
742, Anna Salai, Madras-600 002.
Phone: 83296.

Orient

## sleek Wall Fan





**ALMONARD**
**- an unbeaten excellence**

Available with all leading dealers







national 746

ஒரு ''டெக்னோகிராட்ஸ் கம்பெனி பி. லிட்.,
சென்னை 600 058 '' தயாரிப்பு

## SUKI ELECTRONICS

Best Place to Choose your
**STANDARD**
**Solidaire**
**televista** TV sets



★ Available on cash or easy instalment

Cost of Antenna, installation & delivery charges **FREE** for cash purchases.

**SUKI ELECTRONICS**

16, Veeraraghavan Street,
Nanganallur,
Madras 600 061.

C-3, Kapaleeswarar Shopping Complex, V.A. Road,
Near Saibaba Temple
Mylapore, Madras 600 004.
Phone: 433019.

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

"சியர்ஸ் ஃபார் யுவர் ஹெல்த் பேபி''

பனிக்கட்டித் துண்டுகள் கனச் சதுரங்களாகப் பழுப்பு நிறத் திரவத்தில் மிதக்க ஒரே மடக்கில் அவன் குடித்து முடித்தான்.

அடுத்த சுற்றுக்கு அவன் தயார்.

அன்றுதான் 'சனியன்' என்று பட்டம் வாங்கிய அது விழப்போகும் நாள். ஊரே ஊமையாய் இருந்தது. சவத்தனமாய் அனைவரும் மௌனமாய் ஊர்ந்தனர். எப்பொழுதும் கலகலப்பாகக் காட்சி அளிக்கும் கடைத்தெருக்கள் வெறிச்சோடிக் கிடந்தன. அங்கொருவர் இங்கொருவராகச் சில தைரியசாலிகள் தங்கள் வீரத்தைப் பறைசாற்றிக் கொண்டிருந்தனர்.

''நிச்சயமா விழப்போறதில்லே!''

சில உறுதிமொழிகள் காற்றிலே கரைந்தன.

''விழுந்தாத்தான் என்னங்கறேன்? விதின்னு ஒன்னு இருக்கில்லே?''

சில வேதாந்தங்கள் விளக்கம் கூறிச் சென்றன.

அந்த ''மாளிகை'' மூன்று அடுக்கு.

கீழ்ப் பகுதி ரசாக் வீட்டில் விருந்து. என்றுமில்லாதபடி அன்றைக்கென்று ஒரு கிலோ வாங்கியிருந்தார். சாவதற்கு முன் திருப்தியாகச் சாப்பிட்டு விட்டுக் கூண்டோடு போகலாமே! அவரது வாப்பா மௌனமாகக் குர்ரான் ஓதிக் கொண்டிருந்தார். அவரது பீவி கடைக்குட்டி ரஹுமானை மடியில் விட்டு மெள்ளத் தட்டிக் கொடுத்துக்கொண்டிருந்தாள்.

நடுப் பகலில் ஜானின் மேதைத்தனம் வயலினில் இசையாகப் பறைசாற்றிக் கொண்டிருந்தது. காதலுடன் அவனது மனைவி தன் முகத்தை அவன் தோளில் சாய்த்தவாறு ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவர்களது உலகமே தனி! அங்கு அவர்கள் மட்டுமே! மற்றவர்களைப் பற்றிக் கவலைப்படத் தெரியாத ஜீவன்கள். ஏன்? தங்களைப் பற்றிக் கூட அவர்களுக்குக் கவலைப்படத் தெரியாது.

அதற்குமேல் டாப் ஃப்ளோரில் தான் 'அவன்' தங்கியிருந்தான். அவன் மட்டும் தான். அவனுக்கு அவனேதான் உறவு.

அவனைப் பற்றி முழுமையாக அவனுடைய தந்தை அறிந்ததும் ஹார்ட் அட்டாக் வந்தது. அதன் பின் அவர் அதிக நாள் இருக்கவில்லை. அவனைப் பற்றிக் கருவிலேயே தெரிந்து கொண்டோ என்னவோ, அவனைப் பெற்றுப் போட்ட கையோடு அவனது தாயும் போய்ச் சேர்ந்து விட்டாள். மொட்டை மாடியில் ஒரு மடக்கு நாற்காலியில் அவன் அமர்ந்திருந்தான். அவனுக்கு முன் ஒரு ஸ்டீல் மேஜை. விதம்விதமான பாட்டில்கள்.... கோப்பைகள் அதன் மேல் கொலு வீற்றிருந்தன.

மேஜைக்கு மூன்றும் பக்க வாட்டிலும் மூன்று காலி நாற்காலிகள். அவன் யார் யாருக்கோ விருந்து படைத்துக் கொண்டிருந்தான். சிறந்த ஹோஸ்ட் அவன்!

''வா...ரேகா... வா! மை டியர் ஸ்வீட்டி என் லிஸ்டில் நீ தேர்டா? ஃபோர்த்தா? நினைவில் இல்லைடா கண்ணா... கமான்... ஷேர் வித்மீ.''

வலது கையில் கோப்பையுடன், தலையை ஆட்டி 'அவனை' வரவேற்றான். அவனைப் பற்றிக் கீழே குடியிருப்பவர்களுக்கு நன்றாகத் தெரியும். ஆனால் ஒன்றும் சொல்ல முடிவதில்லை. ஏனென்றால் அவன்தான் அந்த மாளிகைக்குச் சொந்தக்காரன். அவனது கல்யாண குணங்களைப் பற்றி அவர்கள் முழுமை

# "அவன்-அவள்-ஸ்னேகலாப்"

சரோஜா கிருஷ்ணமூர்த்தி

யாகவோ அல்லது அரசல் புரசலாகவோ கேட்டிருந்தாலும், அவைகளைப், பற்றி அவர்கள் . கவலைப்படுவதில்லை. குறைந்த வாடகையில் இவ்வளவு வசதிகளுடன் எங்கே வீடு கிடைக்கும்? அது மட்டுமல்ல. அவனால் அவர்களுக்கு எந்தத் தொல்லையும் இல்லை. முதல் தேதியன்று வாடகை கொடுப்பதற்காக அவனைச் சந்திப்பதோடு சரி. அவனும் அவர்களுடன் தொடர்பு கொள்வதில்லை.

அவன் இருக்கும் பகுதிக்குப் பின்புறத்து மாடிப் படி வழியாக வந்துவிடுவான். இவர்களைச் சந்திக்க வாய்ப்பும் இல்லை. சந்திக்க அவன் பிரியப்படுவதுமில்லை.

அவன் என்றோ ஒரு நாள் சிவப்பு நிற அம்பாஸிடரில் வருவான். ஓரிரு நாட்கள் இருப்பான். அவ்வளவுதான்! பல நாட்களுக்கு வருவதே யில்லை.

அவன் தந்தை அவனுக்கு விட்டுச் சென்ற அந்த வீடும், எங்கோ உள்ள காப்பித் தோட்டமும் அவன் வரை கவலை இல்லாமல் வாழப் போதுமானதாக இருந்தது.

திருவில் சலனமே இல்லை.

பெரும்பாலும் அவன் தன் நாடகத்தை இங்கு அரங்கேற்றுவதே இல்லை. அதெல்லாம் எஸ்டேட் பங்களாவில்தான். எத்தனையோ மலர்களை இதழ் இதழாகப் பிய்த்து அவன் தனக்கே பூஜை செய்து கொள்வதுண்டு.

அவனது தத்துவப்படி திருமணத்தை எதற்கென்று நினைத்தானோ அதன்படியே நினைத்த பொழுதெல்லாம் மண மகனாய் வந்தான்....

அந்த விஷயத்தில் அவனது செல்வம் மூலதனமாகி வந்தது. அவன் தேவைக்கு அதிகமாகவே காகிதக் கற்றைகளைக் கண் மூடித்தனமாக வீசி எறிவான், எத்தனையோ விதமான காட்சிகளில் அவன் கலந்து கொண்டதுண்டு.



''நீயில்லாம என்னால அரை நாள் கூட இருக்க முடியாது ராஜா.''

''ஓ... ஹௌ நைஸ் டியர்!''

''பேசாம என்னைக் கட்டிக்கயேன்.''

''ஹோ... ஹோ... நல்ல ஜோக். லுக் ஹியர் பேபி. உனக்கு மிதப்புலேதான் கண். வாங்கிக்க.''

ஒரு சிறிய சிணுங்கல்!

''போ ராஜா... போதை தானா பெரிது? எனக்கு வேண்டாம்பா! ஐ வான்ட் யு...''

''ஆஹா... என்ன டயலாக்? என்னை உனக்குத் தெரியும். உன்னையும் எனக்குத் தெரியும்...''

''நிசமாத்தான் கண்ணு... நீ யில்லேன்னா நான் தூக்கமாத்திரையைச் சாப்பிட்டு...''-

''ஸ்டாப் இட். கொஞ்சமா கேவு.... இந்தா கூட பக்ஷீஸ்.''

''எதுக்கு?''

''ஒரு ஸ்ட்ரிப் ஆறு ரூபாய் எழுபத்தி அஞ்சு காசு. வரிகள் தனி. ஆறு ஸ்டிரிப் வாங்கு. ஒரேயடியா ஒட்டுக்க முழுங்கு...''

''எதை?''

''நீ சொன்னியே, தூக்கமாத்திரை அதைத்தான்!

இதுவரையில் அவன் தோற்றதே யில்லை.

அந்த யமுனா கேஸில்தான் சற்றுத் தடுமாறினான். அவன் பிடிவாதம் பிடித்தான்.

''இதோ பார் யமுனா... ஸ்வீட் நேம் உனக்கு. அது மட்டும் என்னால முடியாது.''

''ஏன் முடியாது?''

''ஜஸ்ட் டு பி ப்ளெய்ன்... எனக்கு அது பிடித்தமில்லே. என்னோட பிரின்ஸ்பிளும் அது இல்லே. வீணா என்னைக் கட்டாயப்படுத்தாதே...ப்ளீஸ்...''

நிர்த்தாண்டசண்யமாய் அவன் மறுத்து விட்டான். சிறிது கூட வளையவில்லை.

''ப்ளீஸ்... ஊரறிய வேணும். எங்கே யாவது ஒரு கோயில்லே... தனியா.. சாமி சந்நிதியிலே,..., சிம்ப்ளா... மூணு முடிச்சுப் போட்டிடுங்க... அப்புறம் நான் விலகியே போயிடறேன். பிராமிஸா... சத்தியமா... உங்க வாழ்க்கையிலே குறுக்கிட மாட்டேன்."

''நான் நிறையவே படம் பார்த்திருக் கிறேன் யமுனா...''

அவள் அவனுடைய கால்களைக் கெட்டி யாகப் பிடித்துக் கொண்டாள்.

''நான் வாழ ஆசைப்படறேன்... ஐ வாண்ட் டு லிவ்... என்னை ஏமாத்திடாதீங்க ப்ளீஸ்......''

அவள் கதறினாள். அசையாத கல்லாகிப் போனான் அவன். ''தோ பாரு... உனக்கு வேணும்னு அதிகம் தர்றேன்.. இந்தா எடுத்துக்கிட்டுப் போ... எனக்கு லைசென்ஸ் கட்டாதே....''

அவள் அவனை நினைத்தாள். செல்ஸ் உமனாக அவள் வேலை பார்த்த கடைக்கு அவன் அடிக்கடி வந்ததை, அவனோடு கடற் கரையிலும், பார்க்கிலும் சுற்றியதை, ஏ. ஸி தியேட்டரில் 'ஏ' படம் பார்த்ததை, பிறகு ஒரு நாள் அவன் மீது முழுமையாகச் சரிந் ததை, கடைசியாகத் தானே சரிந்து நிற்பதை —எல்லாவற்றையும் நினைத்தாள்.

போய்விட்டாள்.

ஒரேயடியாகப் போயே விட்டாள்.

''இன்னிக்கு எல்லாரும் வந்தாங்க. புவர் யமுனா... நீ மட்டும் பார்ட்டிக்கு வரலியே... ஓ... நீதான் செத்துப் போயிட்டே...பரவா யில்லே... உன் ஆத்மா சாந்தியடையட்டும். ஹெல்ப் மிசல்லீப் டியர்....'' அவன் பாட் டிலைக் கவிழ்த்தான்.

தெரு விளக்குகள் எரிய ஆரம்பித்தன.

இருள் ஆகாயத்தை ஆட்டுக்காரன் கம் பளியாய்ப் போர்த்தியது.

அவன் கண்கள் பசையிட்டன. தெளி வில்லாமல் பார்த்தன.

அதோ... அதோ... அங்கே...

''ஓ... யமுனா... வந்திட்டியா? இப்பத் தான் உன்னை நினைச்சேன்.... யூ ஆர் லேட். எல்லாம் முடிஞ்சு போச்சு. தூங்கட்டுமா... வா... உக்காரேன்...''

அது உட்காரவில்லை. தரையில் பாவாம வெள்ளையாய்க் காற்றில் மிதந்தது.

''ஏன் பேச மாட்டேங்கறே? யமுனா... என்ன வேணும்? எங்கே வந்தே?''

''உங்களைக் கூட்டிக்கிட்டுப் போக...''

''எதுக்கு டியர்?''

''உங்களை விட்டு எப்படி நான் போவேன்? நீங்க விரட்டிட்டாலும் உங்களையே நினைச்சுக் கத்திக்கிட்டே இருக்கேன்... வாங்க போக லாம்....''

''எங்கே டியர்?''

''எங்க வீட்டுக்கு. நான் மட்டும் தனியா எத்தனை நாளைக்கு இருக்க முடியும்? நீங்களும் வாங்களேன்.'' அது அவனை நெருங்கியதும், அவன் உடலெல்லாம் வியர்த்தது.

''ப்ளீஸ்... யமுனா... விட்டுடேன்...இப்ப என்னாலே வர முடியாது. நான் நாளைக்கு ப்ளீஸ்... யமுனா...'' அவன் பின்புறமாக நடந்து கொண்டே போனான். அது அவனை நோக்கி முன்னேறியது. குட்டையான கைப் பிடிச் சுவரில் அவன் சாய—

அது அவனை நெருங்க—

விமானம் ஒன்று தாழ்வாகப் பேரிரைச்சலை விட்டுக் கொண்டு உறுமிச் சென்றது. அதன் பேய் ஓசையில் அவன் ஓலம் இரண்டறக் கலந்தது. ஓவெனக் கதறியவாறு அவன் கீழே.... கீழே... கீழே...

வயலின் ஓசை சட்டென நின்றது.

வீட்டில் உள்ளவர்கள், வெளியே அங் கங்கே நின்றவர்கள், நடந்து கொண் டிருந்தவர்கள் பாய்ந்து ஓடி வந்தனர்.

கூழாகிச் சிதைந்து போன உருவைச் சுற்றி உடனே ஒரு கூட்டம் கூடியது.

மறு நாள் செய்தித் தாளில் பெரிய எழுத்துக்களில் அவன் பெயர் பொறிக்கப் பட்டது. தாழ்வாகப் பறந்த விமான ஓசையைக் கேட்டு ஸ்கைலாப் சிதறி விழுந்து விட்டதாக எண்ணிப் பயந்து அவன் கீழே விழுந்து அதிர்ச்சியால் இறந்து விட்ட தாக ஒரு கதை பரவியது!

---

# அலை ஓசை



# கருத்தரங்கு

செப்டம்பர் 9ந் தேதி.

தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் முக்கியமான ஒரு தினம். தமிழ் மறுமலர்ச்சிக்குக் காரணமான ஒருவர் அவதரித்த நாள். அமரர் கல்கி பிறந்த தினம். இன்றைய எழுத்தாளர்களும், பத்திரிகையாளர்களும், புத்தகப் பதிப்பாளர்களும் நன்றியுடன் நினைத்துப் பார்க்க வேண்டிய நன்னாள். நானும் எண்ணிப் பார்க்கிறேன்.

என் கண் முன்னால் அவர் எழுதிய மகோன்னதமான சரித்திர நாவல்களும் தேசிய உணர்வூட்டும் சமூக நாவல்களும் எண்ணற்ற சிறுகதைகளும் நகைச்சுவைக் கட்டுரைகளும் அரசியல் கருத்துக்களும் கலையுலக விமர்சனங்களும் அணிவகுத்தாற் போல் நிற்கின்றன. அவரோடு அவர் படைத்த அமர கதாபாத்திரங்களும் மனத்திரையில் உலவி வருகிறார்கள்.

என் போன்ற லட்சக் கணக்கான இளைஞர்களுக்கு அன்று படிக்கும் ஆர்வத்தை வளர்த்துத் தேச பக்தியூட்டி நகைச்சுவை ரசனையை உணர்த்தி நமது கலைகளிலும் பண்பாட்டிலும் பெருமை கொள்ளச் செய்தவர் அவர். தமிழகம் நன்கு அறிந்த எவ்வளவோ சாதனைகளைப் புரிந்தார். இரண்டாம் பேருக்குத் தெரியாமல் எத்தனையோ பேருக்கு உதவினார்.

அப்படி உதவி பெற்றவர்களில் நானும் ஒருவன். அவர் போட்டுத் தந்த அஸ்திவாரத்தில் இன்று வானதி பதிப்பகம் உயர்ந்து நிற்கிறது. அவரது நாவல்கள், சிறுகதைகளை மறு பதிப்புச் செய்யும் பாக்கியம் பெற்றுச் சிறந்திருக்கிறது.

அண்மையில் அலைஓசை நாவலைப் பதிப்பித்தேன். அதில் கல்கி அவர்களின் முன்னுரையை மறுபடியும் படிக்க நேர்ந்தது. ஓரிடத்தில் அவர் சொல்கிறார்: ''நான் எழுதிய நூல்களுக்குள்ளே ஏதாவது ஒன்று ஐம்பது அல்லது நூறு வருஷம் நிலைத்து நிற்கத் தகுதியுடையதென்றால் அது 'அலை ஓசை' தான்.''

இது எனக்கு வியப்பளித்தது. அவருடைய எல்லா நாவல்களுமே அமரத்வம் பெற்றவை என்று நமக்குத் தெரியும். ஆயினும் அனைத்திலும் இந்த ஒரு நாவலே சாலச் சிறந்தது என்று கல்கி தாமே எண்ணக் காரணம் என்ன என்று யோசித்தேன். எனக்குச் சில எண்ணங்கள் தோன்றின. கல்கி அன்பர்களுக்கு வேறு பல காரணங்கள் தோன்றக் கூடும். அவற்றைக் கோரிப் பெற்றால் என்ன என்று சிந்தித்தேன்.

எனவே, கல்கி பிறந்த நாளன்று கல்கி வாசகர்களுக்கு இன்றைய கல்கி ஆசிரியர் அனுமதி பெற்று ஒரு போட்டியை அறிவிக்கிறேன்.

**''தாம் எழுதிய நாவல்களுள் மிகச் சிறந்தது அலைஓசை என்று கல்கி அவர்களே கருதக் காரணம் என்ன?''-விடையைக் கல்கியில் இரண்டு அல்லது மூன்று பக்கங்களுக்கு மேற்படா வகையில் எழுதிஅனுப்பலாம். சிறந்த கட்டுரைக்கு ரூ.1000 பரிசு வழங்குகிறேன்.**

கட்டுரைகளைப் பரிசீலித்துப் பரிசுக் குரியதைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை கல்கி ஆசிரியர் ஏற்றுள்ளார். பரிசு பெறும் கட்டுரை தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் கட்டுரைகளுக்குக் கல்கி காரியாலயம் வழக்கமான சன்மானம் வழங்கும். பரிசு பெறும்கட்டுரை டிசம்பர். 5ந் தேதி கல்கி நினைவு நாளினை யொட்டி வெளிவரும் கல்கியில் பிரசுரமாகும். பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கட்டுரைகளைத் திரும்பப் பெறவிரும்புவோர்போதிய அளவு தபால் தலை ஒட்டி சுயவிலாசமிட்ட உறையைக் கட்டுரையுடனேயே இணைத்து அனுப்ப வேண்டும். கடிதப் போக்குவரத்துக் கிடையாது.

அலை ஓசை புத்தகத்தைச் சொந்தத்தில் வைத்திருந்தாலும் சரி, நூலகம் அல்லது நண்பரிடம் இரவல் பெற்றுப் படித்தாலும் சரி, கட்டுரையை **நவம்பர் 10ந்தேதிக்குள்** கிடைக்குமாறு **ஆசிரியர் கல்கி, ரேஸ் கோர்ஸ் சாலை, கிண்டி. சென்னை-600 032.** என்ற விலாசத்துக்கு அனுப்ப வேண்டும். உறையின் மேல் **''அலை ஓசை-கருத்தரங்கு''** என்று குறிப்பிடவும்.

அலை ஓசை புத்தகம் சொந்தத்தில் வாங்க விரும்புகிறவர்களுக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு சலுகையையும் அளிக்கிறேன். 40 ரூபாய் புத்தகத்தை 30 ரூபாய்க்குக் கிடைக்கச் செய்கிறேன். இந்தச் சலுகை இவ்வாண்டு கல்கி பிறந்த நாளில் தொடங்கி அவர் அமரரான தினம் வரை நீடிக்கும். விலாசம்: **வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர். சென்னை-600 017.**

கல்கி அன்பர்களும் ரசிகர்களும் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு தங்கள் சிந்தனா சக்தியை ஊக்கி எழுத்தாற்றலை மிளிரச் செய்வார்கள் என நம்புகிறேன்.

**திருநாவுக்கரசு**
**உரிமையாளர், வானதி பதிப்பகம்**

நான் தேர்தலில் வென்றாலும் பிரதமர் பதவியை விட்டு விட விரும்புகிறேன் — சரண்சிங்




ஜகுவார் விமானபேரம் பற்றிய சர்ச்சை சி.எஸ் — ராஜ்நாராயண் இடையில் முற்றி வருகிறது!








கல்கி

1979 செப்டம்பர் 9
சித்தார்த்தி ஆவணி 24
மலர்: 38 இதழ்: 6



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# மவுண்ட்பாட்டன் மரணம்

**ம**வுண்ட்பாட்டன் மரணத்துக்கு எத்தனையோ இரங்கல் செய்திகள் வந்துள்ளபோதிலும் பிரிட்டிஷ் பிரதமரின் வார்த்தைகள் தனித்துச் சிறந்து நிற்கின்றன. ''மவுண்ட்பாட்டன் மரணத்துக்காக நாம் வருந்தும்போதே அவரை நமக்கு அளித்ததற்காக இறைவனுக்கு நன்றி செலுத்துவோம்'' என்றார் அவர்.

ஆம், இறைவனுக்கு மனம் நெகிழ்ந்து நன்றி கூறவேண்டிய அளவில் அத்தனை உன்னதமான செயல்களைப் புரிந்தவர் மவுண்ட்பாட்டன். பிரிட்டிஷ் அரச குடும்பத்தைச் சேர்ந்த அவர், இரண்டாம் உலகப் போரில் அளப்பரிய ஆற்றலுடன் செயல்பட்டார். கடற் படையைச் சேர்ந்தவராயினும் முப்படை வீரர் என்று மெச்சத்தக்க விதமாகச் சந்தர்ப்பம் நேர்ந்தபோதெல்லாம் விமானப் படையையும் ராணுவத்தையும் வழிநடத்திச் சென்று புகழ் பெற்றார்.

இந்தியாவின் கடைசி கவர்னர்-ஜெனரல் என்ற முறையில் அவர் சுதந்திரத்துக்குப் பின் அதிகார மாற்றத்துக்கு வகை செய்தார். பாகிஸ்தான் பிரிவினையை யொட்டி எதிர்பார்க்கப்பட்ட கலவரங்கள் நடந்தேறியபோது திறமையும் பொறுமையும் கொண்டு மலைபோன்ற பிரச்னைகளைச் சமாளித்தார். புதிதாகப் பெரும் பொறுப்புக்களை ஏற்றிருந்த நேருஜிக்கும் அமைச்சரவைக்கும் பக்கபலமாக இருந்து சீரான யோசனைகள் கூறி அவர்களது நன்றியறிதலையும் அன்பையும் பெற்றார். ராஜாஜியிடம் கவர்னர்-ஜெனரல் பொறுப்பை ஒப்படைத்துவிட்டுத் தாயகம் திரும்பிய பின்னும் இந்தியாவின் அருமை நண்பனாய்த் திகழ்ந்தார். இந்தியாவுக்கு நண்பர்களை உருவாக்கினார்.

உல்லாசப் பயணம் புறப்பட்ட அவருடைய படகில் குண்டு வெடித்ததால் அவர் உற்ற மரணம் உலகை உலுக்கி விட்டிருக்கிறது. அன்பு, சகிப்புத் தன்மை, உலக சமாதானம் என்றெல்லாம் ஒரு பக்கம் தலைவர்கள் பாடுபட்டு வந்தபோதிலும் வெறுப்பும் பகை உணர்வும் வன்முறையும் மறு பக்கம் பெருகி வருவதையே மவுண்ட்பாட்டன் மரணம் உணர்த்துகிறது.

அன்பையே தாம் தோற்றுவித்த மதத்தின் பிரதானமான அடிப்படைக் கொள்கையாக்கினார் ஏசு. அம்மதத்தின் இரு பிரிவினரிடையே அயர்லாந்தில் ஏற்பட்டுள்ள மோதலையும் அதனால் விளையும் வன்முறைகளையும் என்னென்பது? உலகில் தன் ஆளுகைக்கு உட்பட்டிருந்த எத்தனையோ பல நாடுகளுக்குப் பூரண சுதந்திரம் வழங்கியுள்ள பிரிட்டன் வட அயர்லாந்துக்குச் சுதந்திரம் வழங்கவோ வடக்கு, தெற்கு அயர்லாந்துகள் இணைந்து ஒரே நாடாகவோ குறுக்கே நிற்கும் என்று எண்ணுவதற்கில்லை. அங்கே அமைதி நிலவச் செய்ய அது நாளொன்றுக்கு ஒரு மிலியன் பவுன் ஸ்டெர்லிங்குகளைச் செலவழிக்க வேண்டியிருக்கிறது! இப்பணத்தை மிச்சம் பிடிக்கு முன்னர், வட அயர்லாந்தில் பெரும்பான்மையினரான புராடஸ்டண்டுகளும் தென் அயர்லாந்தில் பெரும்பான்மையினரான கதோலிக்கர்களும் ஒருவரை யொருவர் பழிவாங்காமல் சமாதானமாக விட்டுக் கொடுத்துச் சகோதர பாவத்துடன் வாழ்வார்கள் என்ற நம்பிக்கை பிரிட்டனுக்கு ஏற்படவேண்டும்.

மவுண்ட்பாட்டனின் மரணம் ஐரிஷ் மக்களிடையே விசனத்தை ஏற்படுத்தி ஆத்மப் பரிசோதனைக்கு வழிவகுத்து அமைதி நிலவச் செய்தால் அவர் தம் மரணத்தின் மூலமும் பெரும் பணியாற்றியவராவார். அந்தப் பெருமையை அவருக்கு ஐரிஷ் மக்கள் தரப் போகிறார்களா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.



# ராஜ்நாராயண் கேட்ட கேள்விகள்

வட்ட மேஜை

எனக்குத் தமிழ் தெரியா விட்டாலும், என் மனைவியின் உதவியுடன் நவரச சிறு கதைச் சிறப்பிதழ் படித்தேன். ஒன்பதில் மூன்றைப் படித்து முடித்து மிகவும் ரசித்தேன். பாக்கியையும் சீக்கிரமே படித்து மகிழ்வேன்!

பம்பாய் — மோகன் காந்தி

சிகரெட் என் இரண்டாவது மனைவி என ரமேஷ் கூறியுள்ளதைப் படித்தேன்.

1977ம் ஆண்டு இதே ஆகஸ்ட் மாதம் நானும் என் நண்பர்கள் இருவரும் திருப்பதி சென்றிருந்தோம். நண்பர்களில் ஒருவர் என்னைப் போன்றே பல சிகரெட்டுகள் பிடிப்பவர். அவர் விளையாட்டாக என்னிடம் ஏழுமலையான் சந்நிதியில் வைத்துக் கேட்கிறான்: இப்போது முதல் உன்னால் சிகரெட் பிடிக்காமல் இருக்க முடியுமா?'' என வினவினார். நான் வெங்கடாசலபதியை நோக்கிவிட்டுச் சரி என்றேன். அந்த நிமிடம் முதல் இதுவரை நான் சிகரெட்டே பிடிக்கவில்லை. மேலும் எனக்குச் சிகரெட் பிடிக்க வேண்டும் என்ற எண்ணமே எழவில்லை. வேறு யாராவது சிகரெட் பிடித்தால் அந்தப் புகை வாடையே எனக்குக் குமட்டிக் கொண்டு வருகிறது.

என் மனைவி மற்றும் நண்பர்களுக்கு ஒரே சந்தோஷம்.

காஞ்சிபுரம் — இரா. நாராயணன்

'ராஜ்நாராயணனுடன் ஒரு நாள் பேட்டி கட்டுரை படித்தேன். உமது நிருபர் சரியான சாப்பாட்டு இராமராக இருப்பார் போலிருக்கே! ராஜ் நாராயண் உணவு விஷயத்திலே அதிக அக்கறை காட்டியிருந்தார் நிருபர்!

சென்னை-5 — எஸ். சங்கர சுப்பிரமணியன்

''ராஜ் நாராயணுடன் ஒரு நாள்'' கட்டுரை படித்தேன். அவரைக் கோவிலுக்கு அழைத்துச் செல்லும் வாய்ப்பு நான் பெற்றிருந்தேன். அவர் கேட்ட இரு கேள்விகள்: (1) தமிழகத்தில் ஏன் ராதா கிருஷ்ணன் கோயில் இல்லை? ராதாகிருஷ்ணன் என்று பலர் பெயர் மட்டும் சூட்டிக் கொள்கின்றனரே? (2) யோக நரசிம்மனின் தாத்பரியம் என்ன?

சென்னை — சடகோபன்

இதற்குக் குமாரவாடி கே. ராமானுஜாச்சாரியார் கூறும் விளக்கம்:

புற வேறுபாடுகளிடையே அக ஒருமைப்பாடு உள்ளதே இந்தியாவின் சிறப்பு. இங்கே பின்னை மணாளனாய் விளங்குகிறான். அங்கே ராதா கிருஷ்ணனாய்ப் போற்றப்படுகிறான். மூர்த்தி ஒன்று கீர்த்தி பல; ஆத்மா ஒன்று உருவம் பல; கருத்து ஒன்று சுவை பல. தமிழ் நாட்டில் குழந்தை உருவத்துடன்தான் பெரும்பாலும் தவழுகிறான் கண்ணன்.

கண்ணனையே தங்களுக்குக் காதல் நாயகனாக ஆண்களான ஆழ்வார்களும் பெண்ணான ஆண்டாளும் வரித்துப் பாடியுள்ளதால் அன்பர்கள் தங்கள் காதல் சுவை வெளிப்பட ராதா கிருஷ்ணன் என்று பெயர் வைத்துக் கொள்வது வழக்கமாயிற்று. இது வடநாட்டின் தொடர்பினால் ஏற்பட்டது. (2) இரண்யன் வதை நிகழக் காரணமாய் இருந்த சீற்றம் தன் யோகத்தால் தணியத் தானே யோகமூர்த்தியானார். இதன் மூலம் அவனவன் கோபம் அவனாலேயே தணியப் பெற வேண்டும் என்பது பெறப்படுகிறது. தவத்தின் மூலமே புலனடக்கம் பெற முடியும் என்பதையும் உணர்த்துகிறது. பேட்டி: அசோக்குமார்

மிக அழகாகச் சரண் சிங் யார் பகுகுணா யார் என்று புரிய வைத்திருக்கிறீர்கள். அவர்களுக்குப் பதவி மோகம் இல்லவே இல்லை. கிராமப்புற நகர்ப்புற ஏழைகளின் நிலை உயரப் பாடுபட வேண்டும் என்பதற்காகவே பிறவி எடுத்தவர்கள் அவர்கள். நாம் கொடுத்து வைத்தவர்கள்!

அருமையான தலையங்கம்.

கோழிக்கோடு — அழகனார்

லட்சுமி எழுதும் ''பூக்குழி'' ஆரம்பமே வெகு ஜோர். ஒரு பெண்ணின் இதயத்தில் ஏற்பட்ட சோகம், பிரச்னைகள் போன்றவற்றை எடுத்த எடுப்பிலேயே சித்திரிக்க ஆரம்பித்து விட்டார். அதுதானே லட்சுமியின் அலாதி ஆற்றல்.

வழக்கமாக சுஜாதாவின் கதையை முதலில் படிப்பவன் நான். ஆனால் இப்போது அம்மாவுக்குப் பூக்குழியைப் படித்துக் காட்டிவிட்டுத்தான் நான் மற்ற பகுதிகளைப் படிக்க வேண்டியதாயிருக்கிறது.

குறிக்காரன்வலசு — ந. இராமசாமி

ஒன்பது வாரங்களில் வாஸந்தி கதையை முடித்தாரே என்ற கோபம் வந்தாலும், ஓர் அருமையான கதையை, அழகாக, இயற்கையாகக் கொண்டு சென்றதை மறுக்க முடியாது. மாருதியின் அழகான, பொருத்தமான படங்களுக்கு எனது பாராட்டுக்கள்.

திருச்செந்தூர் — ஆ. சீனிவாசன்

## முன் கதை

திருநல்லூர்க் கிராமத்திலிருந்த ராஜ்குமாரின் பூர்வீகமான வீடு கோட்டை போன்றது. சகல நவீன வசதிகளும் கொண்டது. அவனது இளம் மனைவி அகல்யா. தந்தையை இழந்த அவனுக்குத் தாய் பஞ்சரத்தினம். திருமணமாகி ஆறு மாதங்கள் அகல்யாவுடன் ஆனந்த வாழ்வு வாழ்ந்த ராஜ்குமார் உத்தியோகம் தேடி வெளி நாட்டுக்குப் போய் விடுகிறான். தாயாருக்குக் கண் பார்வை மங்கிக் கொண்டு வருகிறது. குடும்ப நிர்வாகம் முழுதும் அகல்யாதான்: வீட்டு வேலைக்காரனும் தோட்டக்காரனுமான சிங்காரமும் அவன் மனைவியும் பின்பக்கமே குடும்பம் நடத்துகிறார்கள். அனைவருக்கும் துணை திருநல்லூர் கிராமத்து மாரியம்மன். சக்தியுள்ளவள். கணவனின் நினைவில் கரைந்து உருகியபடி அவன் நல்வாழ்வை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள் அகல்யா. தாயாரும் தன் பிள்ளையின் பிரிவால் தவிக்கிறாள்.

சேலத்திலிருந்து உறவுக்காரப் பார்வதி குடும்பத்துடன் மாரியம்மன் தரிசனத்துக்கு வருகிறாள். மொட்டையிட்ட குழந்தையை அணைக்கிறாள் அகல்யா. விருந்தாளி அகல்யாவிடம் இந்த வீட்டில் இப்படியொரு குழந்தை எப்போது வரப்போகிறது என்று கேட்டு அவள் காதல் தாபத்தை கிளறி விடுகிறாள். பார்வதி, மாரியம்மனை மட்டும் தரிசனம் செய்ய வருவதில்லை. அகல்யாவின் மாமியாரிடம் ஒரு கூடை வம்பைக் கொட்டிக் கவிழ்க்கவுமே வருவாள். ஊர் கதை பேசி வம்பளந்த பார்வதி, பஞ்சரத்தினம் அகல்யாவை மருமகளாக அடையக் கொடுத்து வைத்திருப்பதையும் பாராட்டினாள். அகல்யாவின் சுறுசுறுப்பையும் அழகையும் விதரணையாக வேலை செய்யும் பண்பையும் கண்டு வியந்து விடை பெற்றுக் கொண்டாள். கணவன் நினைவை ஊதி எரிய விட்டுப் போய் விட்டாள் விருந்தாளி. அதே நினைவில் மூழ்கி இருக்கும்போது போஸ்ட் என்ற குரல் கேட்கிறது. ராஜ்கிட்டே இருந்து கடிதம் அம்மாவுக்கு ஒன்றும் மனைவிக்கு ஒன்றுமாக இருந்தன. அவர்களை விட்டுப் பிரிந்தது தவறு என்று எழுதி விரைவிலேயே திரும்ப இருப்பதைக் கூறி இருந்தான். அன்புக் கணவனின் ஆசைக் கடிதத்தைப் பல தடவை படிக்கிறாள் அகல்யா. இனி நீங்கள் கதையைப் படியுங்கள்.

### 3

இப்பொழுதெல்லாம் பஞ்சரத்தினத்துக்கு மருமகள்தான் ஊன்றுகோல். காலை வந்த பத்திரிகை, வாரா வாரம் அவள் கேட்டு வரும் அந்தத் தொடர்கதை — கொஞ்சம் கந்த புராணம் இத்தனையும் ஒட்டு மொத்தமாக இரவு உணவுக்குப் பின் படுக்கையில் சாய்ந்தபடி மருமகளைப் படிக்கச் சொல்லிக் கேட்பது வழக்கமாகி விட்டிருந்தது.

கந்த புராணம் முழுவதையும் கேட்க விரும்புகிறவள் போல் உறக்கமின்றிச் சில நாட்கள் படுக்கையில் புரண்டு எழுந்து உட்கார்ந்து கொண்டு விடுவதும் உண்டு.

அகல்யாவுக்கு உரக்கப் படிப்பதினால் தொண்டை காய்ந்துவிடும். ஆனாலும் அலுத்துக்கொண்டதில்லை. ''அம்மாவுக்குப் பார்வை குறைந்து விட்டது. தானே படிக்க முடியாது. நீதான் அவர்களுக்குக் கண்களாக இருந்து உதவணும்'' என்று அவள் கணவன் பல கடிதங்களில் அதைப் பற்றி வற்புறுத்தி எழுதியிருந்தான். தொலை தூரத்திலிருந்து கொண்டு கடிதம் மூலம் அவன் விடுத்த அந்த வேண்டுகோளை அவள் மறுத்ததேயில்லை. தான் இல்லாதபோது மனைவி தாயை நன்றாகக் கவனித்துக் கொள்வாள் என்றதோர் ஆழமான நம்பிக்கை அவனுக்கு. அதில் ஒரு துளியும் பங்கப்படக் கூடாது என்ற ஆவேசம் அவளுக்கு. அதனால் பஞ்சரத்தினத்தை அவள் குழந்தையைப் போல் பரிவுடன் பாதுகாத்து வந்தாள்.

''அகல்யா நல்ல பொண்ணு. மகராசியா இருக்கட்டும்!'' கிழவி மனத்தினுள் மருமகளை நித்தமும் வாழ்த்திக் கொண்டுதான் இருந்தாள்.

''பாவம் அத்தை! வியாதியோட கண் வேறு மங்கி, தள்ளாடிப் போயிட்டாங்க'' என்று பரிவினால் உள்ளம் நெகிழ்ந்து போனாள் அகல்யா.

இரண்டு ஆண்டு கால நெருக்கமான பழக்கம் மருமகள் மாமியாரிடையே ஒரு நேசப் பிடிப்பைத் தானாக ஏற்படுத்தி விட்டிருந்தது.

அன்று இரவு பஞ்சரத்தினம் படுக்கையில் விழுந்தது தான் தாமதம். சிறிது பொழுதில் உறங்கிப் போனாள். பத்திரிகைத் தாளின் முதல் பக்கத்திலிருந்து செய்தியை மருமகள் முடிக்கு முன்பே அவளுக்குத் தூக்க மயக்கம். நெஞ்சினின்றும் ஒரு பெரும் சுமையை இறக்கி விட்டது போல், மகனது கடிதத்தை வாசிக்கக்கேட்ட இன்ப மயக்கம். வைத்தியர் கொடுத்திருந்த தூக்க மருந்து வேறு! சில



விளுடிகளில் அவள் குறட்டை விட ஆரம்பித்து விட்டாள்.

பத்திரிகையை மடித்து அப்பால் வைத்து விட்டுக் குழல் விளக்கை அணைத்தாள் அகல்யா. மின் விசிறியை நிதானமாகச் சுழல விட்டாள். துப்பட்டியை எடுத்து மாமியார் மீது போர்த்தி விட்டு, கதவை ஒருக்களித்துக் கொண்டு வெளியே வந்தாள்.

அவளுக்கு உறக்கம் வர மறுத்தது. உற்சாகத்தில் உள்ளம் பல இன்ப எண்ணங்களில் கும்மாளியிட்டது. சாப்பாட்டறை விளக்கைப் போட்டுக் கொண்டு அலமாரியைத் திறந்தாள். மேல் தட்டிலிருந்த சிறு சந்தனப் பேழையை எடுத்தாள். திருமணமான புதிதில் தேன் நிலவுக்கு மைசூருக்குப் போனபோது அவள் கணவன் அவளுக்காக வாங்கி அளித்த முதல் பரிசு, அந்த நகைப் பெட்டி. அவனது கடிதங்களை அதில்தான் அவள் பாதுகாப்பாக வைத்துக் கொண்டிருந்தாள். அவனிட மிருந்து பதில் வரத் தாமதமானால் பழைய கடிதங்களை யெல்லாம் மீண்டும் ஒரு முறை தேதி வாரியாகப் படித்துவிட்டு, தன்னையே சமாதானப்படுத்திக்கொள்வது அவளது வழக்கமாகி விட்டிருந்தது.

மாமியார் தூங்காவிடில் அவளால் அதைக் கூடச்செய்ய முடியாது. கந்த புராணத்தைத்தான் படிக்க வேண்டியிருக்கும். இன்று ஏற்பட்டிருந்த மகிழ்ச்சியில் அவள் அந்தக் கடிதங்கள் அனைத்தையும் மறுபடியும் ஒரு முறை படிக்க விரும்பி மேஜையின் மீது அவைகளை ஒழுங்காகப் பரப்பிக் கொண்டு உட்கார்ந்தாள். ஒவ்வொன்றையும் புதிது போல் படித்துக் கொண்டிருந்தவளுக்கு நேரம் நழுவிச் செல்வதே தெரியாமல் உணர்வுகளுள் ஒன்றிக் கரைந்து கொண்டிருந்தாள்.

''நான் வசிக்கும் மனமா பகுதியில் ஒரு பெரிய ''ஷாப்பிங் சென்டர்'' இருக்கிறது என்று முன்பே எழுதினேன் அல்லவா? இங்கேதான் நான் எனக்குத் தேவையான உணவுப் பொருட்களை வாங்குகிறேன். பால் பவுடர், காப்பித் தூள், சர்க்கரை போன்றவை. நான்தான் தனிக் குடித்தனம் செய்கிறேனே! சில சமயங்களில் நானே சமையலும் செய்வேன்.

காப்பியைப் போட்டு வைத்துக் கொண்டு நான்கு சுவர்களையும் வெறித்தபடி மெல்லக் குடிக்கும்போது (அது காப்பியா? கேட்காதே! அப்படி ஒரு திரவம்!) ஏண்டா பயலே, ராஜ்குமார்! உனக்கு ஏன் இந்தக் கஷ்டம்? நீயாகத் திமிர் பிடித்து ஏற்றுக் கொண்ட தண்டனை என்று நான் நினைக்காத நேரம் இல்லை. அதனாலோ என்னவோ நாட்கள் நீண்டு பொழுது பூதம் போல் தெரிகிறது.''

இன்னொரு கடிதம். அதிலும் பிரிவின் தாபத்தை அவன் வார்த்தைகளால் வர்ணித்திருந்தான். படித்து முடிப்பதற்குள் அவள் கண்களில் நீர் ததும்பியது. பெருமூச்சுடன் பல மாதங்களுக்கு முன் எழுதியிருந்த கடிதம் ஒன்றை எடுத்தாள்.

''கேரளா ஹோட்டல்கள் சில இங்கே இருக்கின்றன என உனக்குக் குறிப்பிட்டிருந்தேன். பெரும்பாலும் அங்கேதான் என் சாப்பாடு. எனக்குச் சமையல் கற்றுக் கொள்ள நீ எங்கே அனுமதி கொடுத்தாய்? சமையலறைப் பக்கம் வந்தாலே என்னை விரட்டி விடுவாய். அதன் பலன்... சிவ சங்கர நாயர் ஹோட்டலில் ஒரு தட்டுச் சாதமும் ரசமும் பப்படமும் கிடைத்தாலே சாம்ராஜ்யம் கிடைத்த மகிழ்ச்சியில் சாப்பிட்டு விடுகிறேன்.

அவள் பிறந்த வீட்டுக் ''கை'' முறை இஞ்சியும் மிளகும் தட்டிப் போட்டு வைக்கும் ஒரு காரமான ரசம். டம்ளர் டம்ளராக ஊற்றிக் குடிப்பான். அவன் சிவந்த முகம் மேலும் மேலும் சிவந்து போகும். கண்களில் கரகரவென்று நீர் வழியும். மூக்கு சிவப்பு மிளகாயாகப் போய்விடும். பொருத்தியிருக்கும் கண்ணாடியில் முகத்தைப் பார்த்துக் கொண்டே அவன் சிரிப்பான்.

''எத்தனை காரமாக நீ சமைத்துப் போட்டாலும், இந்த ராஜ்குமாருக்கு... உன்னைக்





காரமாகப் பேசத் தோணுது. ஏன் தெரியுமா?

''விடுங்க.... எச்சிக் கையோடு... அத்தை பாத்திட்டாங்கன்னு...'' அவள் திமிறிக் கொண்டு உள்ளே விரைவாள். அந்த நினைவு கண்களைப் பனித்தது. அதில் ஓர் இன்பமும் தாங்க முடியாத துன்ப உணர்வும் சேர்ந்து உருண்டையாகத் தொண்டையை அடைக்கவே அவள் செருமிக்கொண்டாள்.

இன்னொரு கடிதத்தில்தான் அந்த மர்மமான செய்தியைத் துவக்கியிருந்தான். ''மனுமா ஷாப்பிங் சென்டரில் நான் ஓர் அதிசயத்தைச் சந்தித்தேன். சில கணங்கள் என்னையே மறந்து சிலையாகிப் போனேன். இந்த அதிசயம் என் உணர்வுகளை அப்படியே ஆட்கொண்டு விட்டது. பிறகு விவரம் சொல்கிறேன்.''

அந்த மர்மம் என்ன? அழகானதொரு பெண்ணா? அன்று வந்த கடிதத்திலும் அதற்கு முன்பும் அதே மர்மத்தை விளக்காமலே தொடர்ந்து எழுதியிருந்தான். ஏன்?

அகல்யா மனம் கலங்கினாள். அப்படியெல்லாம் நடக்கக் கூடியவரில்லையே. அதுவும் அந்த நாடுகளில் தப்புத் தண்டாவிலே இறங்கினால் கடுமையான தண்டனை என்பார்களே! ''முத்துமாரி! அவரிடமிருந்து கடிதம் வராதா என்ற ஆவலில் அதைப் படிக்கும் போது இப்படி ஒரு விஷயம் இருக்கலாம் என்ற எண்ணமே ஏற்பட்டதில்லையே? அதிசயம் என்று குறிப்பிட்டிருந்த அந்த விஷயத்தை அத்தனை ஆழமாக வேறு கோணத்திலே பார்க்கவே இல்லை. தவறான காரியமாக இருந்தால் மனைவியிடம் இப்படி வெளிப்படையாக விவரிப்பாரா? வேறு ஏதாக இருக்கும்?

படுக்கையறையிலே பஞ்சரத்தினம் இருமுவது கேட்டது. பரபரப்பாகக் கடிதங்களைப் பெட்டியில் வைத்துப் பூட்டினாள். அதை அலமாரியில் பழையபடி வைத்து மூடிவிட்டுத் திரும்பினாள்.

''அகல்யா!'' மாமியார் கூப்பிட்டு விட்டாள். கடிகாரத்தை அவசரமாகப் பார்த்தபோது மணி பன்னிரண்டு! ''இய்யய்யோ. இத்தனை நேரமா அவள் உட்கார்ந்து கொண்டிருந்தாள்!

விளக்கை அணைத்து விட்டு வேகமாக ஓடி வந்தாள். ''நீ தூங்கலையா? கொஞ்சம் தண்ணி குடு'' கிழவி கேட்டபடி எழுந்து படுக்கையின் மீது சாய்ந்து கொண்டாள்.

நீரைத் தம்ளரில் ஊற்றிக் கொண்டு வந்து மாமியாரிடம் குடிக்கக் கொடுத்தாள்.

''அவன் சீக்கிரம் வந்துடப் போறான். இப்பவே சொல்லிட்டேன். திங்கட் கிழமை விரதம், சனிக்கிழமை ஒருபொழுதுன்னு நீ உன் உடம்பைக் கெடுத்துக்க வாணும். நல்லா சாப்பிட்டுக்கிட்டு இரு. எங்க வீட்டு மரு

மகளா வரும்போது ஊரே உன்னைப் பார்த்துக் கண்ணை வெச்சது. தளதளன்னு கொல்லைக் கீரைத் தண்டு போலச் செழுமையா இருந்தே. பார்வதி என்னை ரகசியமாக் கேட்டா... 'உன் மருமவளுக்கு உடம்புக்கு என்ன? பாதியாப் போயிட்டாளே'ன்னு. எனக்கே ஒரு மாதிரியா ஆயிடுச்சு. நான் பதில் சொல்றதுக்கு முன்னே அவளே சொல்லிட்டா. ''புருஷனை நினைச்சுக்கிட்டு இந்தப் பொண்ணு துரும்பா தேயுது. கொஞ்சம் புத்தி சொல்லுங்க''னாள். ஆமாம், இப்ப மணி என்ன? தூங்காம என்ன செய்துக்கிட்டிருந்தே?'' அதட்டினாள் பஞ்சரத்தினம்.

''ஒண்ணுமில்லே. அலமாரியில் இருந்த சாமான்களை எடுத்துச் சுத்தப்படுத்திக்கிட்டிருந்தேன்.''

''அதுக்கு நேரம் காலம் கிடையாதா? கதவைச் சாத்திக்கிட்டுப் படும்மா. நேரம் இல்லாம இப்படித்தான் நான் 'அந்தக் காலத்திலே உன்னைப் போலக் கடுமையா உழைச்சேன் — பலன்? வயசு காலத்திலே இப்போ உதைக்குது. எல்லாத்துக்கும் ஒரு அளவு இருக்கும்மா.... போய்ப் படு.'' கடிந்து கொண்டாள்.

சப்தமிடாது கதவைத் தள்ளித் தாளிட்டு விட்டுப் படுக்கை மீது சாய்ந்து கொண்டு போர்வையைக் கழுத்து மட்டும் இழுத்து விட்டுக் கொண்டு சுவரின் பக்கம் திரும்பிக் கொண்டாள். அந்தச் சுவரில் ஒரு திரைப் படம் பார்ப்பது போல் ஓடிய அந்தக் காட்சியில் தன்னை மறந்து லயித்துப் போனாள். முதல் முதலாக அவனைச் சந்தித்த அந்த நிகழ்ச்சி ஏனோ இப்போது ஓடத் தொடங்கியது.

அப்போது அவள் அந்தத் தனியார் பள்ளியிலே ஒரு தாற்காலிக ஆசிரியை. முதல் வகுப்புச் சிறுமிகளுக்கு ஆங்கிலமும் கணக்கும் போதித்துக் கொண்டிருந்தாள். அந்த வேலை கிடைத்ததே ஒருவிந்தைதான். அவள் தான் குடும்பத்தில் கடைக்குட்டி. திருச்சியில் பி. யூ. ஸி. வரை படித்து விட்டுச் சொந்த ஊருக்குத் திரும்பியிருந்தாள். அதற்கு மேல் படிப்புக்கு வசதி செய்யத் தபால்காரக் குருநாதனுக்கு வசதியில்லை. அந்தப் படிப்புக்கூட நகரத்திலிருந்த அவள் அத்தையின் உபயம்.... வயது வந்த பெண்ணை நீடித்துத் தன் பொறுப்பில் வைத்துக் கொள்ள அத்தைக்கு மனமிருக்கவில்லை. பி.யு.சி.யுடன் முற்றுப் புள்ளி வைத்துத் தம்பியிடம் திரும்ப அனுப்பி விட்டிருந்தாள்.

ஒரு வருட காலம் வீட்டிலேயே சும்மா அடுப்பங்கரையை வளைய வந்து கொண்டிருந்தவளுக்கு அதிர்ஷ்ட வசமாக அந்தப் பள்ளியில் தற்காலிகமாக ஒரு வேலை கிடைத்தது. தலைமை ஆசிரியைக்குத் தபால்காரர் மீது கொஞ்சம் மதிப்பு உண்டு. அவரது வறுமையைக் கண்டு பரிதாபமும் உண்டு. கணக்கும், ஆங்கிலமும் போதித்த ஆசிரியை கல்யாணம் செய்து கொண்டு திடீரென்று வேலையை ராஜிநாமாச் செய்துவிட்டுப் போய்விட்டிருந்தாள். தகுந்தவளைத் தேடிப் பிடிக்கும் வரை தற்காலிகமாக என்றுதான் அந்த வேலை அவளுக்குக் கிடைத்திருந்தது. எத்தனையோ முறை அவள் உள்ளம் அந்தப் பள்ளித் தலைமை ஆசிரியையை வாழ்த்திக் கொண்டிருந்தது.

அந்த வேலை... அவளுக்கு எத்தனை பெரியதொரு வாய்ப்பை வழங்கி விட்டிருந்தது? அவள் உத்தியோகம் பார்த்து முதல் மாதச் சம்பளத்தைக் கையில் வாங்கி முடிக்கு முன்... அதிர்ஷ்டம் வேறு ஒரு உருவில் அவளைத் தானாகவே தேடிக் கொண்டு ராஜ்குமார் என்கிற என்ஜினியராகப் பள்ளிக்கூடத்துத் தோட்டத்திலே அந்தப் பெரிய வேப்ப மரத்தடியில் வந்து நின்றதே!

உடம்பெல்லாம் சிலிர்க்க... தன்னுள்ளே மெல்லச் சிரித்தபடி அவள் அந்தக் காட்சியைக் கற்பனையால் தொடர்ந்தாள்...

''தலைமை ஆசிரியை திருமதி காந்தாமணியை இப்போது பார்க்க முடியுமா?'' வெய்யிலுக்காக அந்த மரத்தடியில் இடைவேளையின்போது உட்கார்ந்திருந்தவளிடம் கேட்ட குரல்... பட்டுப் போல் காதுகளைத் தழுவத் திகைப்புடன் திரும்பினாள்.

''திருமதி காந்தாமணியைப் பிறகு பார்த்துக் கொள்கிறேன். இப்போது உன்னைப் பார்த்து முடிக்கவே இந்த யுகம் வரை காலம் போதாது போலிருக்கிறதே'' என்று சொல்லாமல் கண்களால் அவளை எப்படித்தான் விழுங்கினான்?

அவள் மட்டும் என்ன? நிமிர்ந்து அவனைப் பார்த்துவிட்டு, பேசத் தோன்றாது தடுமாறிக் கொண்டு நின்றாளே? ஏன்?

வேப்ப மரத்திலிருந்த குயில் கூவிக் கொண்டு சிறகடித்து வேறு பக்கம் பறந்த போதுதானே இந்த உலக நினைப்பு வந்தது?

''அப்போ உன் முகம் ஏன் அப்படிச் சிவந்து போச்சு?'' என்று அந்தக் கதையை நினைவூட்டி அவள் கன்னங்கள் சிவக்க அழுத்திக் கிள்ளி விளையாடுவானே.... ம்....

''அகல்யா! தூங்கிட்டியா?'' மாமியார் மெல்லக் கூப்பிட்டதும் அவள் மூச்சைப் பிடித்துக் கொண்டு தூங்குவதுபோல் மௌனம் சாதித்தாள்.

தூக்கம் வருமா? அவன் வந்து அந்த அதிசயத்தை நேரில் சொல்லும் வரை? என்னென்னவோ எண்ணிக் குழம்பிப் போகும் அவள் விரைவில் உறங்குவாளா? சந்தேகம் தான்...

(தொடரும்)

ஒரு தொழிற்சாலையில் எழுதப்பட்டிருந்த வாசகம்:

"அடிமை போல வேலை செய்;
இளவரசன் போல வாழ்க்கை நடத்து!"

— கீதா

# பால்கிவாலா பார்வையில்...

அமெரிக்க மாநிலங்கள் ஐம்பதில் முப்பத்து நான்கு மாநிலங்களைப் பார்த்து விட்டேன். இயற்கை வளம், எழில், செல்வச் செழிப்பு எல்லாம் காணும்போது ஆண்டவன் நியாய உணர்வுடன் நடந்து கொள்கிறானா என்றே தோன்றி விட்டது. இந்தியாவைப் போல் அமெரிக்கா மூன்று மடங்கு பெரிது. மக்கட் தொகை நம்முடையதில் மூன்றில் ஒரு பாகம்தான்!

பொதுவாக அமெரிக்கர்கள் மிகவும் சிநேக பாவத்துடன் நடந்து கொள்கிறார்கள். நியாய உணர்வுள்ளவர்களாக விளங்குகிறார்கள். இதனால்தான் அங்கு மூன்று லட்சம் இந்தியர்கள் அமைதியாக வாழ முடிகிறது. அமெரிக்காவில் அநீதிகள் நடக்காமல் இல்லை. ஆனால் அந்த அநீதிகளைக் கண்டிப்பதில் அமெரிக்கருக்கு நிகர் யாருமில்லை!

பொதுப் பணிகளுக்குத் தனிப்பட்டவர் நன்கொடை என்பது அங்கு ஒரு பாரம்பரியமாக வந்துள்ள பழக்கம். அமெரிக்கப் பல்கலைக் கழகங்கள் போல் செல்வச் சிறப்பு மிக்கவை உலகில் வேறு எங்கும் கிடையாது. உயர்ந்த நோக்கமுள்ள எந்த நிறுவனத்தையும் அமெரிக்கத் தனவந்தர்கள் போஷிப்பார்கள். இந்திய யோகாசிரமங்கள் தழைக்கின்றன.

அமெரிக்கர்கள் நகைச்சுவை மிக்கவர்கள். எந்த அரசியல்வாதியும் தனது முக்கியத்துவத்தைக் குறித்து மார் தட்டிக் கொள்ள முடியாது. கர்வப்பட ஆரம்பித்தால் அவரை நாளிதழ்கள் பிய்த்து உதறிவிடும்! அமெரிக்க நாடாளுமன்ற உறுப்பினர் ஒருவரது வரவேற்பு அறையில் அவரைக் கிண்டல் செய்து வரையப்பட்ட பல கார்ட்டூன்களை அவர் கண்ணாடி போட்டு மாட்டி வைத்துக்கொண்டிருப்பதை நான் பார்த்தேன். அரசியல் சாசனம்தான் முக்கியம், அரசியல்வாதியல்ல வென்பதை அந்நாட்டவர் நன்கு புரிந்து கொண்டிருக்கிறார்கள்.

கட்டுப்பாடற்ற சுதந்திரப் பொருளாதாரத்தில் தனி நபர்களின் ஊக்கமும் முயற்சியும் எவ்வளவு மகத்தான சாதனைகளைப் புரியலாம் என்பதற்கு அமெரிக்கா எடுத்துக்காட்டு. நுண்பொறி இயலில் அமெரிக்காவுக்கு இணையாக வேறு எந்த நாடும் இல்லை. உலகெங்கும் நடக்கும் ஆராய்ச்சிகளில் 40 சதம் அமெரிக்காவில்தான் நடக்கிறது! பத்து ஆண்டுகளுக்கு முன் 60 சதமாக இருந்தது. இப்போது ஜப்பானும் சில ஐரோப்பிய நாடுகளும் போட்டி போட்டுக் கொண்டு முன்னேறியுள்ளன. நுண்பொறி இயல் முன்னேற்றம் காரணமாக வேலை வாய்ப்புக்கள் குறையவே யில்லை.

உலகப் புகழ் பெற்ற நாளிதழ் வால் ஸ்டிரீட் ஜர்னல், பாலோ ஆல்டோ நகரில் தயாராகிறது. உடனே இதனை ஒரு ''கண்பொறி'' பார்வையிட்டு, தான் கண்டதை மின் அலைகளாக மாற்றி, 22,300 மைல் உயரத்தில் உலகைச் சுற்றி வந்து கொண்டிருக்கும் செயற்கைச் சந்திரனுக்கு அனுப்புகிறது. அங்கிருந்து பன்னிரண்டு நகரங்களுக்குச் சங்கேதக் குறிகள் அனுப்பப்படுகின்றன. இதற்கு மூன்றரை நிமிஷமே ஆகிறது! அடுத்த பத்து நிமிஷங்களுக்குள் சங்கேதக் குறிகள் உலோக எழுத்தாக மாறி நாளிதழ் அச்சாகி விடுகிறது. ஆக ஒரே சமயத்தில் 12 நகரங்களில் அந்த நாளிதழ் அச்சாகிறது!

இத்தகைய விஞ்ஞான முன்னேற்றத்தால் சில சங்கடங்களும் உண்டு. ஹோட்டலில் அறை எடுத்துத் தங்கிய ஒரு தம்பதி காலை ஏழு மணிக்கு எழுப்புமாறு ரிஸப்ஷனில் கூறினர். ஆனால் காலை 6:30க்குத் தாமாகவே எழுந்து விட்டனர். எனவே ஏழு மணிக்கு ஃபோன் மணி அடித்து எழுப்ப அவசியமில்லை என்று ரிஸப்ஷனில் சொன்னார்கள். ஆனால், அவர்கள் உத்தரவு ஏற்கனவே கம்ப்யூட்டரில் பதிவாகிவிட்டதெனவும் இனி அதனை மாற்ற முடியாது எனவும் பதில் கிடைத்தது!

கானஸஸ் மாநிலத்தில் ஒரு விமானக் கம்பெனி பத்தாயிரம் பேர்களை வேலைக்கு





✖ அமெரிக்க சுதந்திர தேவி சிலை



✖ பால்கிவாலா

வைத்துக் கொண்டு ஓர் ஆண்டுக்கு 5,000 விமானங்களைத் தயாரிக்கிறது. நாம் பெங்களூரில் 35000 பேர்களை வேலைக்கு வைத்துக் கொண்டு வருடம் 500 விமானங்களைத் தயாரிக்கிறோம். காரணம் ஆற்றலின்மை அல்ல. போட்டா போட்டியும் நிர்வாகத்தில் வர்த்தக நோக்கும் இல்லாததுதான்.

அமெரிக்காவில் சராசரி ஒரு நாளைக்கு 00 புதிய புத்தகங்கள் வெளியிடப்படுகின்றன. இவற்றில் குப்பையும் உண்டு, மனித சமுதாயத்துக்குப் பெரும் பயன் தரும் சிந்தனைகளும் உண்டு.

இன்று அமெரிக்காவின் தேசிய விளையாட்டு பேஸ் பால் அல்லதுஃபுட்பால் அல்ல, வழக்குத் தொடர்வதுதான்! 4967,000 வழக்கறிஞர்கள் ஆண்டு தோறும் ஏழு மில்லியன் வழக்குகளை நடத்துகிறார்கள். ஒரு மாணவன் தான் முதல் வகுப்பில் தேறாமல் நான்காவது வகுப்பில் தேறியதால் தன் மனம் மிகவும் சோர்வும் விசனமுமுற்றுப் பாதிக்கப்பட்டு விட்டதாகவும் இதற்கு நஷ்டஈடாக 8,53,000 டாலர் தரவேண்டும் என்றும் பல்கலைக் கழகம் மீது வழக்குப் போட்டிருக்கிறான்!

அரசாங்க நிர்வாக யந்திரம் அமெரிக்காவிலும் அழுது வடிகிறது. மெத்தனம் அலட்சியப் போக்கு நிலவுகிறது. மொய்னிஹன் அரசு நிர்வாக யந்திரத்தைக் குறிப்பிடும் போது ''பட்டாணியளவு மூளையுள்ள திமிங்கிலம்'' என்று வர்ணிக்கிறார். வீண் செலவுகளைக் குறைக்க முடியவில்லை; குறைக்க யோசனைகள் கூறுவோர் விரும்பப்படுவது மில்லை!

அரசியல்வாதிகளில் தேர்தல் கால வாக்குறுதிகளை அள்ளி வீசுவோர் அங்கும் உண்டு. மோசடிகளில் ஈடுபட்டவர்கள் மக்கள் பிரதிநிதிகளாக மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுகிற நிலையையும் காண்கிறோம். ஆயினும் பெரும்பாலான மக்கட் பிரதிநிதிகள், அரசியலில் இல்லாவிட்டால் தங்களுக்குத் தாங்களே வசதியான வாழ்க்கைக்குத் தேவையான நல்ல வருவாயைத் தேடிக் கொள்ளக் கூடிய ஆற்றல் மிக்கவர்கள். இதே போல் இந்தியாவிலும் இளைஞர்கள் நன்கு சம்பாதிக்கக் கூடிய நிலையில் இருப்பினும் அதைத் துறந்து தேசப் பணியாற்ற முன்வரவேண்டும்.

அமெரிக்காவில் மிக உயர்ந்த நிலையில் உள்ள இந்திய விஞ்ஞானிகள் தங்களுக்குப் பணம் முக்கியமல்ல என்றும் இந்தியா திரும்பிப் பணியாற்றத் தாங்கள் தயாராக இருப்பதாகவும் சொல்கிறார்கள். ஆனால் அரசியல் தலையீடு அல்லது நிர்வாக யந்திரத்தின் தொல்லைகள் தங்கள் பணிகளில் குறுக்கிடக் கூடாது என்கிறார்கள். இவர்கள் ஃகோரிக்கைகளைக் கவனிக்க, அரசியல் பூசல்களிலேயே காலம் கடத்தி விடுகிற நமக்கு எங்கே நேரம் இருக்கிறது? இவர்களுடைய ஆற்றலெல்லாம் அயல்நாடுகளை மேன் மேலும் வளப்படுத்தப் பயன்படுகிறது; ஆனால் நம் தேசத்தை முன்னேற்றப் பயன்படுத்திக் கொள்ள முடியவில்லை என்னும் போது நமது அரசியல் சித்தாந்தத்தில் ஏதோ கோளாறு இருப்பதாகத்தானே அர்த்தம்?

1800ம் ஆண்டு அமெரிக்காவில் பதவியில் இருந்த கட்சி, ஆட்சியைக் குறை கூறுவதை அனுமதிக்கவில்லை. தேர்தலில் அந்தக்கட்சி படுதோல்வி அடைந்தது. அடுத்து ஆட்சிக்கு வந்த கட்சி மக்களின் சுதந்திரங்களைப் பூரணமாய்த் திரும்பவும் வழங்கியது!.

சுதந்திரம் பெற்று முப்பதே ஆண்டுகள் ஆன இந்தியாவும் இது போன்ற அனுபவங்களைப் பெற்று வருகிறது. எதிர் காலத்தில் எனக்கு நம்பிக்கை உள்ளது. விஞ்ஞானிகள், பொறி இயல் நிபுணர்கள் ஆகியோரின் எண்ணிக்கையில் அமெரிக்கா, ருஷ்யாவுக்கு அடுத்தபடியாக மூன்றாவது ஸ்தானத்தை இந்தியாதான் பெற்றிருக்கிறது. தேவை, மன உறுதியும் கடின உழைப்பும் கட்டுப்பாடும்தான்.



நன்றி: பவன்ஸ் ஜர்னல்
ஆண்டுமலர் 1979

# பன்னிரண்டு பெண்களும் ஒரு ஆணும்

ஹேமா ஆனந்ததீர்த்தன்

''சார், லேடீஸெல்லாம் கும்பலா வெளியே நிக்கறாங்க. உங்களைப் பார்க்கணுமாம்'' என்று பியூன் விட்டல் சொன்னான்.

எனக்குப் 'பக்'கென்றது.

''என்ன விஷயமாம்?'' என்று கேட்டேன்.

''தெரியலே சார்; எங்கிட்ட ஒண்ணும் சொல்லலே.''

இந்தக் காரியாலயத்தில் இது ஒரு நியூ சென்ஸ். எதற்கெடுத்தாலும் கும்பல் கும்பலாகச் சிப்பந்திகள் என் அறைக்குள் படையெடுத்து என்னோடு விவாதிக்கவோ, தங்கள் குறைகளைச் சொல்லவோ ஆரம்பித்துவிடுவார்கள். 'இவ்வளவு பேர் ஏன் வருகிறீர்கள்? பிரதிநிதிகளாக யாராவது இரண்டு பேர் வந்து விஷயத்தைச் சொன்னால் போதாதா?' என்று கேட்டால் ஒத்துக் கொள்ள மாட்டார்கள்.

எங்கள் காரியாலயத்தில் இருப்பது பன்னிரண்டு பெண்கள். அவர்கள் எல்லோருமே பேசுவதில் வல்லவர்கள். ஒரு விவாதம் என்று வந்து விட்டால் லேசில் சளைக்க மாட்டார்கள். பேசித் தீர்த்து விடுவார்கள். அவர்களோடு பேசிவெல்வது என்பது கஷ்டம்.

அன்று அந்தப் பன்னிரண்டு பேரும் வந்து என் முன்னால் உட்கார்ந்து கொண்டார்கள்.

''பன்னிரண்டு பேர்கள் கரெக்டா இருக்கிறீர்கள். நீங்கள் இந்த மாதிரி டெபுடேஷன் வருகிற நாட்களில் ஒருவர் கூட ஆப்சென்ட் ஆகாமல் இருப்பது கூட ஒரு கோயின்சிடன்ஸ்' தான் என்று நினைக்கிறேன்'' என்றேன் சிரித்துக்கொண்டே.

பன்னிரண்டு பேரில் சிலர் மரியாதைக்காகப் பதில் சிரிப்புச் சிரித்தனர். சிலர் நான் சொன்னதை ரசிக்காதது போல் 'உம்'மென்று முகத்தை வைத்துக் கொண்டிருந்தனர்.

''எஸ், வாட் கேன் ஐ டூ ஃபார் யூ?'' என்றேன்.

''நாங்கள் ஆபீஸ் விஷயமாகப் பேச வரவில்லை'' என்றாள் மாலினி.

''ஐ ஸீ! அப்படியென்ன?'' என்று கேட்டேன் ஆச்சரியத்துடன்.

''பர்சனல் மேட்டர்'' என்றாள் பூமா.

''அப்படியா? ஐ எம் ஸோ ஹேப்பி. ஆனா பர்சனல் மாட்டரை இவ்வளவு பேரோட பேசறதை விடத் தனித் தனியே ஒவ்வொருத்தர் கிட்டேயா பேசினா நல்லா இருக்காதோ?'' என்று எனக்குத் தோன்றியதை உடனே கேட்டு விட்டேன். ஆனால் அடுத்த விநாடியே உதட்டைக் கடித்துக் கொண்டேன்; நான் ஹாஸ்யம் என்று நினைத்து ஏதோ சொல்லப் போக அவர்கள் அதைத் தவறாக எடுத்துக் கொண்டால் ஆபத்து ஆயிற்றே?

''இல்லே, விஷயம் எங்கள் எல்லோருக்கும் சம்பந்தப்பட்டது. ஆனால் ஆபீஸ் விஷயமல்ல என்பதனால் பர்சனல் மேட்டர் என்று சொன்னோம்'' என்று விளக்கினாள் ஆஷா.





# பூர்வீகம் போலந்து!

அட்டைப்படத்தில் கார் பானெட் மீது அமர்ந்திருக்கும் குமாரி உமா சுப்பிரமணியம் போஸ் கொடுத்ததில் வியப்பில்லை; அவருடைய செல்ல நாய் அருமையாகப் போஸ் கொடுத்ததை நினைக்க நினைக்க ஆச்சர்யமாக இருக்கிறது என்கிறார் வண்ணப்படம் எடுத்த உத்ரா.

பொமரேனியன் என்று பார்த்த உடனேயே நாயின் ஜாதியைப் பலர் கூறி விடுவார்கள். பொமரேனியா போலந்து நாட்டின் ஒரு மாநிலம். பால்டிக் கடற்கரைப் பகுதியில் உள்ளது; அது தான் இந்நாயின் பூர்வீக பூமி.

---

''ஆல் ரைட். சொல்லுங்க. ஐ ஆம் ஆல் அட்டென்ஷன்'' என்றேன்.

மேலுக்கு நான் பதற்றப்படாதவன் போலக் காட்டிக் கொண்டாலும், உள்ளுக்குள் என் இதயம் படபடவென்று ரொம்ப வேகமாக அடித்துக் கொள்ளத் தொடங்கியிருந்தது. என்ன விஷயமாக இருக்கும் என்றே என்னால் ஊகிக்க முடியவில்லை.

''நீங்கள் எழுதும் கதைகளைப் பற்றிப் பேச வந்திருக்கிறோம்'' என்றாள் ஷீலா.

எனக்கு சந்தோஷமாக இருந்தது. நல்ல வேளை, வேறு எதைப் பற்றியும் இல்லாமல் என் கதைகளைப் பற்றிப்பேச வந்திருக்கிறார்கள் என்பதனால் நிம்மதி ஏற்பட்டது.

''ஓ அப்படியென்றால் என் கதைகளையெல்லாம்நீங்கள் படிக்கிறீர்கள் என்றுதெரிகிறது'' என்றேன், பெருமைப்படுபவன் போல முகத்தை வைத்துக் கொண்டு.

''படித்து நாங்கள் அடைந்த வேதனையையும் கோபத்தையும் சொல்வதற்காகத்தான் வந்திருக்கிறோம்'' என்றாள் வித்யா.

''ஐ ஏம் வெரி சாரி. அப்படி உங்களையெல்லாம் வேதனைப் படுத்தும்படியாக என் கதைகளில் என்ன இருக்கிறதென்று எனக்குப் புரியவில்லையே?'' என்றேன்.

உண்மையிலேயே எனக்குப் புரிந்திருக்கவில்லை.

''உங்கள் கதைகளில் நீங்கள் எங்களையெல்லாம் இழுத்து, எங்களைப் பற்றியெல்லாம் எழுதுகிறீர்கள். இது எங்களை அவமானப் படுத்துவது போலிருக்கிறது'' என்றாள் ஷைலஜா.

''இது பெரிய குற்றச்சாட்டாக இருக்கிறதே. சொல்லப்போனால், உங்கள் எல்லோருடைய பேரும்கூட எனக்குச் சரியாகத் தெரியாதே. உங்களில் இரண்டொரு பேரைத் தவிர மற்றவர்களிடத்தில் நான் பேசியது கூட இல்லையே! உங்களைப் பற்றி நான் எப்படி என் கதைகளில் எழுத முடியும்?'' என்று துணிந்து ஒரு பொய்யைச் சொன்னேன்.

''எங்களோடு பேசித்தான் எங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதில்லை. மற்றவர்கள் எங்களைப் பற்றிச் சொல்வதை வைத்துக் கொண்டு எழுதி விடுகிறீர்கள்'' என்றாள் ஸ்டெல்லா.

''அதுதான் நீங்க செய்யற பெரிய தப்பு, எங்களைப் பத்தி மத்தவங்க சொல்ற இல்லாததையும் பொல்லாததையும் எழுதறதை விட எங்களையே கேட்டு எழுதினால் கூடப் பரவாயில்லை'' என்றாள் கார்த்தியாயினி.

''சீ, பைத்தியமே நீ பேசாம இரு'' என்று அவள் தொடையில் கிள்ளி அவள் வாயை அடைத்தாள் மாதவி.

''அப்படி எந்தக் கதையில் யாரைப் பற்றி நான் என்ன எழுதியிருக்கிறேன் என்று குறிப்பிட்டுக் காட்டினால் உபகாரமாயிருக்கும்'' என்றேன்.

''ஒரு கதையல்ல, இரண்டு கதையல்ல, ஒவ்வொரு கதையிலும் எங்களில் யாரையாவது ஒருவரைப் பற்றி எதையாவது எழுதாமல் நீங்கள் விடவில்லை. இதை இத்தோடு நிறுத்திக் கொள்ளுங்கள் என்று சொல்லத் தான் வந்திருக்கிறோம்'' என்றாள் விமலா.

''உதாரணமாக எதையாவது ஒன்றைச் சொல்லுங்களேன்'' என்று கேட்டேன்.

''ஏன்? நீங்கள் எழுதிய தொடர்கதை 'ஒற்றைக் கட்டி'யில் முழுக்க, முழுக்க என் பெண்ணுடைய கதையைத்தானே எழுதியிருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் வசுமதி.

கேட்டாள் என்று சொல்வதைவிட கேட்டார் என்றுதான் சொல்ல வேண்டும். பன்னிரண்டு பேரிலும் மூத்தவர் அவர்தான்; வயது நாற்பத்திரண்டு, நாற்பத்தி மூன்று இருக்கலாம்.

''அடப் பாவமே! அப்படியா? உங்களுக்குப் பதினேழு, பதினெட்டு வயதில் ஒரு பெண் இருக்கக் கூடும் என்பதையே என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லையே? இப்பொழுது நீங்கள் சொல்லித்தான் தெரிந்து கொள்கிறேன். நான் கதையில் எழுதியது மாதிரி பெண்கள் பக்கத்து வீட்டுப் பையனையோ, எதிர்வீட்டுப் பையனையோ, சக மாணவனையோ, சக சிப்பந்தியையோ இழுத்துக் கொண்டு 'ஓடி' விடுவதென்பது இன்று சர்வ சாதாரணமாகப் பல வீடுகளில் நடக்கக் கூடிய விஷயம். அதை வைத்துக் கொண்டு எழுதினேன். உங்கள் பெண்ணின் கதை என்று நீங்களாகவே ஏன் தம்பட்டம் அடித்துக் கொள்கிறீர்கள்?'' என்று சொன்னேன்.

''நான் ஒன்றும் தம்பட்டம் அடிக்கவில்லை. ஆபீஸ் முழுக்க எல்லோரும் பேசிக் கொள்ளுகிறார்கள், 'ஏ.ஜி.எம்., வசுமதியின் பெண்ணின் கதையை அம்பலமாக்கி விட்டார்'

என்று. எனக்கு நாக்கைப் பிடுங்கிக் கொள்ளலாம் போலிருக்கிறது'' என்றாள் (ர்) வசுமதி. ஏற்கனவே சிவப்பான முகம். கோபத்தினாலோ அவமானத்தினாலோ இன்னும் சிவந்து விட்டது.

''என்னை நீங்கள் நம்பா விட்டால் நான் ஒன்றும் செய்ய முடியாது. நான் எழுதியது உங்கள் பெண்ணின் கதையாகப் போய் விட்டது ஒரு கோயின்ஸிடன்ஸ் தான் இருந்தாலும் என்னையே அறியாமல் நான் உங்கள் மனத்தைப் புண்படுத்தி விட்டதற்காக வருந்துகிறேன்'' என்று வேறு வழி இல்லாமல் வசுமதி யைச் சமாதானப்படுத்தினேன்.

''ஒற்றைக் கட்டில் கதை கோயின்ஸிடன்ஸ்னே வைத்துக் கொள்வோம். விஷம் இறங்கியது கதையில் லாரல், ஹார்டியைப் போல உருவம் கொண்ட இரண்டு பெண்களை வர்ணித்து எழுதியிருக்கிறீர்களே, அது என்னையும் ஷீலாவையும்தான் என்று எல்லாரும் கேலி செய்கிறார்கள். அதற்கு என்ன சொல்லுகிறீர்கள்?'' என்று பூமா கேட்டாள்.

அவள் அப்படிக் கேட்டதும் அவர்களுக்குள்ளாகவே சிலர் சிரிப்பை அடக்கக் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதை என்னால் கவனிக்க முடிந்தது.

''நான் எழுதுவதற்கு முன்னால் அப்படிக் கேலி செய்து கொண்டிருக்கவில்லையா?'' என்று கேட்டேன்.

''நீங்கள் எழுதிய பிறகு கேலி செய்வது அதிகமாகி விட்டது'' என்றாள் ஷீலா.

''அப்படியானால் எங்களை வைத்துத்தான் எழுதினீர்கள் என்று ஒப்புக் கொள்கிறீர்களா?'' என்று கோபத்தோடு கேட்டாள் பூமா.

''ஒப்புக் கொள்கிறேன். ஆனால் உங்களைப் பற்றித் தவறாக ஒன்றும் எழுதவில்லையே. உங்கள் இருவரின் நட்பின் உயர்வையல்லவா போற்றி எழுதியிருந்தேன் அந்தக் கதையில்?''

''நீங்கள் எங்களைப் போற்றியும் எழுத வேண்டாம், தூற்றியும் எழுத வேண்டாம். எங்களை விட்டுவிட்டு வேறு யாரைப் பற்றி வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் எழுதிக் கொள்ளுங்கள்'' என்றாள் மாலினி சிறிது கடுமையாக.

''ஒரு கதையில் தூக்கி வைப்பீர்கள். அதற்காக சந்தோஷப்பட்டால் இன்னொரு கதையில் பாதாளத்தில் இறக்கி விடுவீர்கள். இரண்டுமே வேண்டாம்'' என்றாள் மாதவி.

''நீங்களெல்லாம் சொல்லுவதைப் பார்த்தால் எனக்குக் கற்பனையே இல்லாதது போலவும், உங்களைப் பார்த்து உங்கள் வாழ்க்கையை அப்படியே கதையாக எழுதி விடுவதாகவும் சொல்வது போலல்லவா இருக்கிறது? இந்த ஆபீசுக்கு வருவதற்கு முன்னாலும் நான் கதை எழுதிக் கொண்டுதான் இருந்தேன்'' என்றேன்.

''யார் கண்டார்கள், அந்தக் கதைகளெல்லாம் கூட நீங்க வேலை செய்த பெங்களூர், கல்கத்தா, பம்பாய் ஆபீசிலுள்ள பெண்களைப் பற்றியதாக இருக்கலாம். அங்கே

போய் விசாரித்தால் தானே தெரியும்?'' என்றாள் வித்யா.

எல்லோரும் சிரித்தார்கள்.

''நான் ஒன்று சொல்லட்டுமா?'' என்று கேட்டேன்.

''சொல்லுங்கள்'' என்று கோரஸ் பாடினார்கள்.

''உங்களைப் பற்றியெல்லாம் எழுதியிருப்பதாக கம்ப்ளெய்ன்ட் செய்கிறீர்களே, என்னைப் பற்றியும் நான் என் கதைகளில் எழுதிக் கொண்டிருக்கிறேனே அதை நீங்கள் பார்க்கவில்லையா? அப்படி எழுதும் போதும் என்னைப் பற்றி உயர்வாக எழுதாமல் தாழ்த்திக் கொண்டும், கேவலப்படுத்திக் கொண்டும் எழுதியிருக்கிறேன். என் மனைவியை வைத்துப் பல கதைகள் எழுதியிருக்கிறேன். என் மைத்துனியை வைத்து எழுதியிருக்கிறேன். எங்கள் உறவினர்களில் பல பேர் என் கதையின் பாத்திரங்களாக வந்திருக்கிறார்கள். எல்லோருமே அதைப் பார்த்து விட்டு சந்தோஷப்படுவதைத்தான் நான் இதுவரை கண்டிருக்கிறேனே ஒழிய உங்க மாதிரி கோபப்பட்டுப் பார்த்ததில்லை'' என்று ஒரு குட்டி லெக்சர் அடித்தேன். ஆனால் நான் சொன்னதில் முழுவதும் உண்மை இருக்கவில்லை. என் உறவினர்கள் பலரிடமிருந்து நான் கதைகள் விஷயமாக நன்றாக வாங்கிக் கட்டிக் கொண்டிருந்தேன். சிலர் என்னிடம் பேச்சுவார்த்தை கூட நிறுத்தி விட்டிருந்தார்கள்.

''உங்களைப் பற்றியும் உங்க ரிலேடிவ்ஸைப் பற்றியும் நீங்க என்னவேணா எழுதிட்டுப் போங்க. பட் லீவ் அஸ் அலோன்'' என்றாள் ஸ்டெல்லா.

''நீங்க ஒண்ணுமே சொல்லலையே விமலா?'' என்று அதுவரையில் பேசாமலிருந்த விமலாவைக் கேட்டேன்.

''நான்தான் முதலிலேயே சொல்லி விட்டேனே. எங்களை இழுக்காமல் உங்களால் கதை எழுத முடியாதென்றால் இனி மேல் கதை எழுதுவதையே விட்டு விடுங்கள்'' என்றாள்.

டெலிஃபோன் மணி அடித்தது. ரிஸீவரை எடுத்துக் காதில் வைத்துக் கொண்டேன்.

முல்லை ஆசிரியர் முத்தையா பேசினார். தீபாவளி மலருக்கு என் கதை வேண்டுமாம். இரண்டே நாட்களில் அனுப்பி வைக்க வேண்டுமாம்.

''ஸாரி, முத்தையா சார். நான் கதை எழுதுவதையே நிறுத்தி விடலாம் என்று முடிவு செய்திருக்கிறேன். காரணம் அப்புறம் சொல்லுகிறேன். மன்னிச்சுக்குங்க'' என்று கூறி ரிஸீவரை வைத்து விட்டேன்.

''திருப்திதானே'' என்று எல்லோரையும் பார்த்துப் பொதுவாகக் கேட்டேன்.

''ரொம்ப அவசரமா முடிவு எடுத்துட்டீங்க. எங்க உத்தேசம் நீங்க கதை எழுதறதையே விட்டுடணும்கறதில்லே'' என்றாள் ஷைலஜா.

''பரவாயில்லே: எல்லாம் நல்லதுக்குத்தான். நானும் கொஞ்ச நாள்ரெஸ்ட் எடுத்துக்கறேன்'' என்றேன்.

''அப்ப நாங்க வரோம் சார். தப்பா நினைச்சுக்காதீங்க'' என்று கூறி மாலினி எழுந்திருந்தாள். கூடவே மற்றவர்களும் எழுந்து விட்டனர்.

''போய்ட்டு வாங்க. நீங்களெல்லாம் மனம் விட்டுப் பேசினதில் எனக்குச் சந்தோஷம்தான்'' என்று அவர்களுக்கு விடை கொடுத்தனுப்பினேன்.

இது நடந்த ஒரு மணி நேரம் கழித்து கார்த்யாயினி என் அறைக்குள் நுழைந்தாள், ஏதோ ஒரு கேஸ் கட்டைத் தூக்கிக்கொண்டு.

''என்ன கார்த்யாய்னி?''

''கேஸ் ஒண்ணுமில்லே சார். மத்தவங்க கூப்பிட்டாங்கங்கறதுக்காக நான் அவங்ககூட வந்தேன். ஆனா எனக்கு அவங்க சொல்றதிலே சம்மதமில்லே. நீங்க எழுதறதை நிறுத்தாதீங்க. எழுதுங்க. என்னைப் பத்தியே வேணுமானா எழுதுங்க. உங்களுக்கு என் வாழ்க்கையைப் பத்தி நானே சொல்றேன்'' என்றாள்.

எனக்கு ஆச்சரியம். அவளோடு பேசி அனுப்பினேன்.

அரை மணி நேரம் கழித்து ஆஷா வந்தாள். ''நான் கோபமாகப் பேசியிருந்தா என்னை மன்னிச்சுக்குங்க சார். ஒரு கட்டுப்பாட்டுக்காக நான் அவங்களோட சேர்ந்து வந்தேன்' பட் ஐ டோன்ட் அக்ரி வித் தெம்!'' என்றாள்.

அடுத்த இரண்டு நாட்களில் ஒவ்வொருவராகப் பன்னிரண்டுபேருமே என்னிடம் தனித் தனியாக வந்து ஏறக்குறைய கார்த்யாயினியும், ஆஷாவும் சொன்னது போலவே சொன்னார்கள்.

''இதையே வெச்சு நீங்க ஒரு கதை எழுதிடலாம்'' என்று வித்யா ஐடியா கொடுத்து விட்டுச் சென்றாள்.

முல்லைமுத்தையாவுக்கு ஃபோன் செய்தேன். ''நாய் வாலை நிமிர்த்த முடியாது. என்னால் கதை எழுதாமல் இருக்க முடியாது. நாளைக்கு என் கதை உங்க கையில் கிடைக்கும்'' என்றேன்.

---

நாம் தற்போது பயன்படுத்தி வரும் சாதாரண தர்மா மீட்டருக்குப் பதில் புதிய 'எலக்ட்ரானிக்' தெர்மா மீட்டர் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இதை நோயாளியின் வாயில் பொருத்த வேண்டியதில்லை. இந்தத் தெர்மா மீட்டரில் பொருத்தப் பட்டுள்ள 'ஒயரை' நோயாளியின் உடலில் ஏதாவது ஒரு பகுதியில் பொருத்தினால் போதும். 'டெம்பரேச்சர்' தெரிந்துவிடும். இதனால் தூங்கும் நோயாளிகளைத் தொந்தரவு செய்ய வேண்டாம்.

-சம்பத் குமாரி

ஆதாரம்: 'விஸ்டம்'



# கவிதையால் வீடு பெற்றவர்

அ.ச.ஞானசம்பந்தன்



ரஸிகமணி பிறந்த தினம் செப்டம்பர் - 13

**மா**விடராகப் பிறந்தவர்கள் வீடு பேற்றை அடைய வேண்டும் என்பதே அப் பிறப்பின் குறிக்கோள் என்பதை எல்லாச் சமயங்களும் வலியுறுத்துகின்றன. இதில் கருத்து மாறுபாடு ஏதும் இல்லை. ஆனால் அக்குறிக்கோளை அடைவதற்குரிய வழிகளை வகுப்பதில்தான் அளவற்ற கருத்து வேறுபாடுகளும் போராட்டமும் தோன்றுகின்றன. தங்கள் தங்கள் சமயக் கொள்கைகளைக் கடைப்பிடிப்பதால் மட்டுமே ஒருவன் விடுதலை அடைய முடியும் என்று பல சமயங்கள் அறுதியிட்டுக் கூறுகின்றன.

இந்த நாட்டைப் பொறுத்த வரை மிகப் பழைய சமயங்களாகிய சைவம், வைணவம் என்ற இரண்டும் குறிப்பிட்ட ஒவ்வொரு வழியை மட்டும் கூறாமல் பற்பல வழிகளை வகுத்துத் தந்துள்ளன. தாச மார்க்கம், சத்புத்திர மார்க்கம் என்பன போன்ற நான்கு வழிகளை வகுத்துத் தந்ததுடன், கால தேச வர்த்தமானங்கட்கு ஏற்பப் புதிய வழிகளும் இறைவன் அருளால் ஏற்படலாம் என்றும் கூறியுள்ளன.

அறிவின் துணை கொண்டு இறைப் பொருள், உயிர், உலகம் என்பவற்றையும் அவற்றின் இயல்பையும் ஆராய்ந்து சத்யப் பொருளை அறிய முற்படுவது ஞான மார்க்கம் என்று கூறப்பெறும். இதன் எதிராக உணர்வின் துணை கொண்டு இறைவனைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடாமல் அவன் பால் அன்பு கொண்டு அந்த அன்பையே பெருக்கித் தான் என்ற அகங்காரத்தை அந்த அன்பில் கரைத்துக் கொள்வது பக்தி மார்க்கம் எனப்பெறும்.

இந்தப் பக்திமார்க்கத்தின் மற்றொரு கிளையும் உண்டு. இறைவனை நாத வடிவாகக் கொண்டு அதில் ஈடுபடுவதாகும் அக்கிளை வழி. நாத உபாசனை என்றும் இதனைக் கூறுவர். தியாகப்பிரமம் இந்த வழியைக் கடைப்பிடித்த வராவார். 'ஓ.ராமா! உன் நாமம் எத்தனைருசி' என்று அவர் பாடுகிறார். இராம நாமம் எல்லா சித்திகளையும் தருவது என்று அறிந்து அவற்றைப் பெற வேண்டும் என்று கருதி அந்த ராம நாமத்தை உபாசிப்பவர்கள் ஒரு வகை. அவர்கட்கு ராம நாமம் ருசிக்காது; அதன் எதிராக சகல வல்லமை பொருந்திய மந்திரப் பொருளாகும் அந்நாமம். ஆனால் தியாகப்பிரமம் எந்த சித்தியையும் நாடிச் செல்லவில்லை. அதன் எதிராக அந்த நாமத்தைக் கூறுவதால் ஏற்படும் இன்பம் ஒன்றையே பொருளாகக் கொண்டு விட்டார். நாம ஜபத்திற்கு வேறு பலனை அவர் எதிர் பார்க்கவில்லை. அதனால் தான் 'நாமம் எந்தருசி' என்று பாடிச் சென்றார். அவருக்கு முன்னர் வாழ்ந்த ஆழ்வார் பெருமகனும் ''பச்சைமாமலை போல் மேனி, பவளவாய் கமலச் செங்கண்; அச்சுதா, அமரர் ஏறே ஆயர் தம் கொழுந்தே என்னும், இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகம் ஆளும்; அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே'' என்று பாடிச் சென்றார்.

இதிலேயே மற்றொரு கிளையும் உண்டு. இக் கிளைவழிச் செல்கின்றவர் மிக மிகக் குறைவான தொகையினர் ஆவர். ஏனெனில் இம்முறை மிகமிகக் கடுமையான ஒன்றாகும். இம்முறையை மேற்கொள்பவர் சொல், பொருள் என்ற இரண்டில் மட்டும் ஈடுபடுபவர். 'சொல்லும் பொருளுமாக இருக்கும் உமாகாந்தனை வழிபடுகிறேன்' என்று ரகு வம்சத்தின் கடவுள் வாழ்த்தில் காளிதாசன் பாடிச் செல்வது அறியத் தக்கது. சொல் என்பது நாதப் பிரபஞ்சம், சொல் குறிக்கும், பொருள் என்பது விந்துப் பிரபஞ்சக். எனவே

# வாசகர்களுக்கு அதிர்ஷ்டப் பரிசுத் திட்டம்

இந்தப் பக்கத்தில் ஒரு ஜோடி விழிகளையும் ஒரு கவிதையையும் காண்கிறீர்கள். இதே போன்று கடந்த ஐந்து வாரங்களாகப் பார்த்தீர்கள். ஒவ்வொரு வாரமும் வெவ்வேறு நட்சத்திரத்தின் கண்கள்; வெவ்வேறு கவிஞருடைய கவிதை.

ஆனால் ஒவ்வொரு வாரமும் விழிகளும் கவிதைகளும் பொருத்தம் பார்த்துப் பிரசுரிக்கப்படவில்லை. மாறிப் போயிருக்கின்றன.

ஆறு ஜோடி விழிகளையும் ஆறு கவிதைகளையும் கவனித்து, யோசித்துப் பார்த்து நீங்கள் இணை சேர்க்க வேண்டும். எதிர்ப் பக்கத்தில் இடம் பெற்றுள்ள கூப்பனில் உங்கள் முடிவை கவிஞர் பெயரையும் எதிரே நட்சத்திரத்தின் பெயரையும் எழுதுவதன் மூலம் தெரியப்படுத்த வேண்டும். தனித் தாளில் எழுதி அனுப்பப்படும் விடைகள் நிராகரிக்கப்படும்.

ரயில் ராதிகா இந்த ஆறு கவிதைகளையும் ஆறு ஜதைக் கண்களையும் பொருத்தம் பார்த்து இணை சேர்த்து எங்களிடம் ஒரு விடை தந்திருக்கிறார். அந்த விடை எந்த வாசகருடைய விடையுடன் ஒத்துப் போகிறதோ அவருக்கே முதல் பரிசு. இரண்டாவது மூன்றாவது பரிசுகளும் ஆறுதல் பரிசுகளும் உண்டு.

பரிசு விவரம்:

**முதல் பரிசு: பிரஸ்டீஜ் பிரஷர் குக்கர்**
**2-ம் பரிசு: விஐபி பிரீஃப் கேஸ்**
**3-ம் பரிசு: அலாரம் கடிகாரம்**
**ஆறுதல் பரிசுகளாக 200 கல்கி தீபாவளி மலர்கள்.**

ஒன்றுக்கு மேற்பட்ட சரியான விடைகள் வந்தால் பரிசுப் பொருள்களின் மதிப்பைக் கணக்கிட்டு அத்தொகை பகிர்ந்தளிக்கப்படும். 200க்கு அதிகமான ஆறுதல் பரிசுகள் தரவேண்டிய நிலை ஏற்பட்டால் சீட்டுக் குலுக்கல் முறையில் 200 பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

**முடிவு தேதி செப்டம்பர் 15**

உறையின் மேல் ''அதிர்ஷ்டப் பரிசுத் திட்டம்'' என்று குறிப்பிட்டு, ஆசிரியர் கல்கி சென்னை-32 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். கடிதப் போக்கு வரத்துக் கிடையாது. சந்தேகம் எழும் விஷயங்களில் ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

ஸ்ரீவித்யா



## இந்த வாரக் கவிதை:

பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இனமீன் இருங்கழி ஓதம் மல்குதொறும்
கயம் மூழ்கு மகளிர் கண்ணின் மானும்

— கயமனார்
(குறுந்தொகை)

(பொருள்: கழியிலே பூத்த நெய்தல் மலர்கள் மகளிர் கண்கள் போல் அழகாயுள்ளன. கழியின் நீர் கடலை அடுத்திருப்பதால் கடலின் ஓதம் மிகும்போது மலர்கள் நீரில் மூழ்கி மறையும். ஓதம் குறையும் போது மலர்கள் வெளியே தோன்றும். இவ்வாறே குளத்து நீரில் மூழ்கிக் குளிக்கும் மகளிரின் கண்கள் மறைவதும் தோன்றுவதுமாய் உள்ளன!

இக்கவிதையில் கண்ணுக்கு இயற்கைப் பொருளை உவமையாக்காமல் இயற்கைப் பொருளுக்கு மகளிரின் கண்களை ஒப்பிட்டுக் காட்டுகிறார் கவி.

---

தான்' நாத விந்து கலாதி நமோ நம' என்று அருணகிரிப் பெருமான் பாடிச் சென்றார். எனவே உருவற்ற இறைவனுக்கு ஒரு வடிவு அல்லது உருவம் கற்பித்துக் கொண்டு விக்ரக ஆராதனை பண்ணுவதைக் காட்டிலும் சொற்பொருள் வடிவான அவனைத் தியானிப்பது ஒரு நுண்மையான முறையாகும்.

குற்றாலத்தில் வாழ்ந்து மறைந்த ரசிகமணி டி. கே. சி. என்ற முனிவர் இந்த வழியைப் பின்பற்றியவர். பாட்டு, அது குறிக்கும் பொருள் என்ற இரண்டிலேயே இறைவனை முழுவதுமாகக் கண்டவர். இறைவனை அனுபவிக்கத் தொடங்கினால் அதில் முழுவதுமாக அமிழ்ந்து போவதுதான் முறை. இதே அனுபவத்தைப் பாட்டில் பெற்றார் அப்பெருமகனார். மற்றையோருக்கு வெறும் சொல்லடுக்காய் பொருள் கோவையாய் உள்ள பாடல்கள், தேமாங்காய், புளி மாங்காய் என்ற வாய்

# இந்தவாரக் கண்கள்:



கூப்பன் :

| | கவிஞர் பெயர் | நட்சத்திரத்தின் பெயர் |
|---|---|---|
| 1 | | |
| 2 | | |
| 3 | | |
| 4 | | |
| 5 | | |
| 6 | | |

என் பெயர் ..................................................

கையெழுத்து ..................................................

விலாசம் ..................................................

..................................................

..................................................

பாட்டு வடிவமாக உள்ள பாடல், டி. கே. சி. அவர்கட்கு, இறை அனுபவத்தில் அவரை அமிழ்த்திவிடும் சாதனமாக அமைந்து விட்டது.

உயிரை உருக்குகின்ற இசைகூடப் பலருக்கு வெறும் சப்தமாக அமைந்து விடுகிறது. காரணம் இசையில் ஈடுபடும் மனப் பக்குவம் அவர்கள்பால் இல்லை. ஆனால் இசையைக் கேட்டு யானையும் மதம் அடங்கி விடும் என்று கூறுகின்றனர். அதேபோல ஏனையவர்கட்கு சாதாரணச் சொற்களுடன் கூடிய பாடல்கள் டிகேசிக்குப் புதிய உலகத்தை, புதிய அனுபவத்தைத்தரும் கருவியாக அமைந்து விட்டன. இதன் பயனாக அவருடைய உரைகளைக் கேட்பவர் பலர் இந்தப் பாடலில் இவர் எதைக் கண்டு விட்டு இப்படிக் 'கும்மாளி' போடுகிறார் என்று வியப்படைவதும் உண்டு!

ஆனால் அவருடைய பக்குவமான அந்த மன

நிலையும், ஒருமுகப்பட்ட உணர்வும் இருந்தால்தான் அந்தப் பாடலில் அந்த அனுபவத்தைப் பெற முடியும். கவிதை அனுபவத்தில் கூட, சொல்லில், ஓசையில், பொருளில், கற்பனையில், உவமை முதலிய அணிகளில் ஈடுபடுபவர்கள் உண்டு. ஒரு சிலர் இவை ஒவ்வொன்றிலும், ஒரு சிலர் இவை அனைத்திலும் ஈடுபடுவதுண்டு. இவை அனைத்தையும் கடந்து ஏதோ ஓர் அனுபவத்தைப் பெற்று விட்டார் குற்றாலப் பெரியார். அவர் உரை யாடலைக் கேட்டவர்கள் அனைவரும் அதனை அனுபவித்தார்கள் என்று கூற முடியாது. தாம் பெற்ற இந்த அனுபவத்தை நமக்குப் பகிர்ந்து தருவதற்கு அரும் பாடுபட்டார் பெரியார். ஆனால் அனுபவத்தை எவ்வாறு பகிர்ந்து தர முடியும்? சொற்களின் மூலமாகத்தானே பகிர முடியும். எனவே குற்றாலத்துப் பெரியாரும் தம் அனுபவத்தை நமக்கு எடுத்துக் கூறச் சொற்கள் என்னும் கருவியைத்தான் கைக் கொண்டார். ஆனால் துரதிர்ஷ்டவசமாகச் சொற்கள் உணர்ச்சியை வெளிக்காட்டச் சிறந்த கருவிகள் என்று கூற முடியாது. Word is an imperfect vehicle of thought என்று மேனாட்டார் கூறுவர்.

சொற்களின் இந்தக் குறைபாடு காரணமாகத்தான் குற்றால முனிவரின் உணர்ச்சிப் பெருக்கை அதனைக் கேட்டவர் யாவரும் பகிர்ந்து கொள்ள முடியவில்லை. மற்றொரு குறையும் உண்டு, ஒரே சொல்லைப் பலர் கேட்டால் ஒரே பொருளை அனைவரும் நினைக்கின்றனர் என்று கூற முடியாது. கேட்பவர்களின், அறிவு, அனுபவம் முதலியவற்றால் அந்தச்சொல்லின் பொருள் மாறுபடுவதும் உண்டு. அதேபோல டிகேசியின் உணர்ச்சியில் தன்னைக்கரைத்துக் கொள்ளக் கூடிய பெரு நிலையை அடைந்திருந்தவர்கள் கோடிக்கு ஒருவர் கூட இல்லை என்றுதான் கூற வேண்டும்.

உணர்ச்சியில் தன்னைக் கரைத்துக் கொள்வது என்றால் என்ன? இதற்கு விளக்கம் கூறமுற்படுவதைவிட ஓர் உதாரணத்தால் இதனை விளங்கிக் கொள்ள முடியும். நம்மில் எத்தனைப் பேர் குலக் கொழுந்தாக இருந்த ஒரேமகனைக் காளைப் பருவத்தில் இழந்துவிட்டு இழந்த மறுநாளே கவிதையில் ஈடுபட முடியும்? அப்படி ஈடுபட முடிந்தால் அவர் தான் உணர்ச்சியில் தன்னைக் கரைத்துக் கொண்டவர் ஆவார். அப்படிச் செய்த ஒரே மனிதர் குற்றால முனிவர் டிகேசி ஆவார்.

இது எப்படி முடிந்தது? எதிரே இருப்பவர் யார் என்று அவர் கவலைப்பட்டதே இல்லை. பக்தன் ஆண்டவனிடம் அன்பு கொண்டு அந்த அனுபவத்தில் அமிழ்ந்து நிற்கையில் அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் என்ன நினைப்பார்கள் என்று கவலைப்படுவானா? அப்படிக் கவலைப்பட்டால் அவன் உண்மை பக்தனாக மாட்டான். அவனும் அவனுடைய ஆண்டவனும் சந்திக்கும் பொழுது இந்த உலக நினைவே அவனுக்கு இராது. அதே போல டிகேசி கவிதை விளக்கம் தொடங்கினால் அங்கு இரண்டு பொருள் ஒன்றாகி விடும். தொடக்கத்தில் டிகேசி, கவிதை என்ற இரண்டுடன் விளக்கம் தொடங்கும். சிறிது நேரத்தில்டிகேசி கவிதைஎன்ற இரண்டும் மறைந்து கவிதை அனுபவம் என்ற ஒன்று தான் இருக்கும். டிகேசி என்ற மனிதனை அனுபவம் என்ற நினைவு முற்றிலுமாக ஆட்கொண்டு, அவரையே விழுங்கி விட்டு தானேயாக அது விசுவரூபம் எடுத்து நிற்கும். இதில் எதிரே நிற்பவர் யார், எவர் என்ற நினைவுக்கே இடமில்லை. அதனால்தான் சாதாரண மனிதர், அறிவில் மேம்பட்டவர், கேள்வி ஞானம் மிக்கவர் என்ற வேறுபாடு இல்லாமல் எதிரே நிற்பவர் யாவராயினும் டிகேசி ஒரே மாதிரியாகப் பாடலில் ஈடுபட்டு விளக்கம் தருவார். எதிரில் இருப்பவர் தம் அனுபவத்தில் பங்கு கொள்கிறாரா இல்லையா என்பது பற்றி அவர் கவலைப்படுவதில்லை. அப்படிக் கவலைப்பட்டு எதிரே இருப்பவர் விளங்கிக் கொள்வதற்கு வழி என்ன என்ற ஆராய்ச்சியில் அவர் இறங்கி இருந்திருப்பின், அவர் டிகேசியாகி விட மாட்டார். இதன் உண்மைக் காரணத்தை அறிய வேண்டும். எல்லாரிடத்திலும் அளவு மீறி அன்பு கொண்டிருந்த ஒரு பெருமகனார் தாம் சொல்வதைப் பிறர்புரிந்து கொள்கிறார்களா இல்லையா என்று கவலைப்பட இல்லை என்றால் அது கர்வத்தினாலோ அலட்சியத்தினாலோ விளைந்ததன்று. காரணம், கர்வம் அலட்சியபாவம் என்ற இரண்டும் அவர் அகராதியிலேயே இல்லை. அப்படியானால் வேறு யாது காரணம் என்று சிந்தித்துப் பார்த்தால் உண்மை விளங்கும். விளக்கந் தொடங்கியவுடன் எல்லோரிடத்திலும் பரிவும் அன்புங் கொண்ட டிகேசி என்ற மனிதர் மறைந்து விடுகிறார். டிகேசி என்ற மனிதர் முழுவதுமாக மாறி கவிதை அனுபவம் என்ற ஒன்றாகமட்டும் நிற்கிறார். இதுவே அவர் விடுதலை பெறக் கையாண்ட வழியாகும். யார் அனுபவத்தில் ஒன்றிப் போய்த் தன்னை இழக்க முடியுமோ அவர்கள் மட்டுமே டிகேசியை உணர முடியும்.

உணர்ச்சியே வடிவான டிகேசியும் அறிவே வடிவான இராஜாஜியும் எவ்வாறு ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளவும் கூடி அனுபவிக்கவும் முடிந்தது என்ற வினா நியாயமானதே. அறிவின் எல்லையாக நின்ற விவேகானந்தரும் உணர்ச்சிப் பிழம்பாக நின்ற பகவான் இராமகிருஷ்ணரும் எவ்வாறு இணைந்தனர். ஆம்! இவர்கள் இருவரும் இருவேறு துருவங்கள். ஆனால் அறிவு இறுதியில் உணர்ச்சி பிழம்பைக் கண்டவுடன் அதில் லயித்து அடங்கி விடுகிறது என்றாலும் தன்னை அது இழப்பதில்லை. உணர்ச்சி தன்னை இழக்கும், அறிவு இறுதி வரை தன்னை இழக்காது. எனினும் இந்த இரு துருவங்களும் இணைவது ஒரு புதுமை. அதே போலத்தான் இராஜாஜி என்ற துருவம் தன்னை இழக்காமலேயே, தான் என்பதை அறவே இழந்துவிட்ட உணர்ச்சிப் பிழம்பாகிய டிகேசி என்ற கடலில் இணைந்தது.

காடுகள் சென்று களசடை வைத்து மூக்கைப் பிடித்துத்தான் வீடு பெற முடியும் என்று நினைக்கும் உலகத்தார்க்கு பாட்டில் முற்றிலுமாக ஈடுபடுவதன் மூலமும் வீடு பேற்றை அடையலாம் என்று வாழ்ந்து காட்டிய டிகேசி என்ற மனிதர் கோடியில் ஒருத்தர் ஆவார்.

# வைரங்கள்

சுஜாதா



## அத்தியாயம் 6
## லைசென்ஸ்

To enter upon the lands and to search for win or carry away and dispose of minerals.

ராகவாச்சாரி, பெரியசேட்டு சின்ன சேட்டாக இருந்த போதிலிருந்தே அவர்கள் குடும்பத்துக்கு வக்கீல். பத்திரம் எழுதுவதில் மன்னன். சிக்கலான ஆங்கிலச் சொற்கள் கொண்டு அவர் எழுதிய டாக்குமெண்டுகளினால் கோர்ட்டுக்கு நடையாக நடந்த குடும்பங்கள் பற்பல. பாகம் பிரிப்பதில் சூரர். பிராது கொடுப்பதில் விற்பன்னர். போக்கியத்துக்குக் கொடுத்த சொத்துக்களை உடைமையாக்குவதில் சாணக்கியர். சேட் குடும்பத்திற்கு ஸ்திரமான வக்கீல். ரிடெய்னர் என்ற மாச சம்பளம் வாங்குபவர். ஆர். எஸ். புரத்தில் வீடு. அறுபது வயசுக்கு டயபடீஸ் ரத்த அழுத்தம் எந்தக் கோளாறுமின்றி நாலாயிர திவ்யப்பிரபந்தம் வாசிப்பவர்.

ப்ரேம் நேராக அவர் வீட்டுக்குச் சென்று திண்ணைப்படி மேல் இருந்த அனுமார் — நாமம் — கருடன் போர்டுக்குக் கீழே செருப்பைக் கழற்றி உள்ளே நுழைந்தான். ஊஞ்சலில் ராகவாச்சாரி ஆடிக் கொண்டிருக்க, பக்கத்தில் கட்சிக்காரன் கைகட்டிக் கொண்டு நின்று கொண்டிருந்தான். பின்கட்டிலிருந்து பேத்தி மோகன வர்ணத்தை அட்டூழியம் பண்ணிக் கொண்டிருந்தது.

''ஆச்சரியமா இருக்கு. என்னைப் பார்க்க சின்ன சேட்டா?''

''ஒண்ணுமில்லே அய்யங்கார். எனக்கு ஒரு விஷயம் தெரியணும். சின்ன விஷயம்.'' ஊஞ்சலில் உட்கார்ந்து அவருடன் ஆடினான்!

''சொல்லு.'' என்று அவன் தோள் மேல் வாத்சல்யமாகக் கைவைத்துக் கேட்டார்.

''இந்த ஆள் வெளில போறதா?'' என்று கட்சிக்காரனைப் பார்த்தான் ப்ரேம்.

''கவுண்டரே இப்படிக் காத்தாட வெளியே போயிட்டு வாங்க!''

''உத்தரவுங்க'' என்று அவர் வெளியே போக, வக்கீல் பிரேமிடம் ''உன்னைவிடப் பணக்காரன்! எப்படி இருக்கான் பாரு!'' என்றார். ''சொல்லு சேட்டு!''

''ஒரு இடத்தை வாங்கணும்.''

''வாங்கிட்டாப் போறது! அதுக்கென்ன?''

''எங்கே மால்த்தி.''

''காலேஜ் போயிருக்கா! எடம் வேணுமின்னியே, நிலமா?''

''நிலம்! விலைக்கு வாங்கி அங்கே தோண்டணும்.''

''தோண்டணுமா, தோண்டணுமா?''

''கட்பாறை கொத்திப் பாக்கறது.''

''அது தோண்டறது! நீயும் உன் தமிழும்!''

''முரசு படிக்கறேன் அய்ங்கார். தோண்டி அங்கே ஏதாவது கிடைக்குதா பார்க்கணும்.''

''கிடைக்குதா சொல்லு, கிடைக்குதா!''

''அதானே சொன்னேன்.''

''நிலத்தை வாங்கி அங்கே தோண்டணுமா? புதையலா? கிணறு? இல்லே க்வாரியா? கல் உடைக்கற பிஸினஸா?''

''இல்லே. வெறும் ஜமீன்.''

''எதுக்குத் தோண்டணும்?''

''சொன்னேனே. ஏதாவது கிடைக்... கிடைக்குதா பார்க்கணும்.''

''என்ன மினரல்ஸா?''

''ஏதாவது.''

''தங்கமா?''

''தங்கம்? இல்லே! வேற ஏதாவது அலுமினியம், இரும்பு, மக்னிசயம், எல்லாமே இருக்குதில்ல''

---




அண்மையில் பெங்களூரிலிருந்து வரும் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்', 'டெக்கான் ஹெரால்ட்' பத்திரிகைகளில் நார்வாரில் உள்ள டாக்டர் டி. வி. நட்கர்னி எழுதியுள்ள கடிதம்:

1961ல் நான் ரிடையரான பிறகு நாளிதழ்களுக்குக் கடிதங்கள் எழுத ஆரம்பித்தேன். இதுவரை மொத்தம் 3461 கடிதங்கள் அனுப்பியதில் 1999 கடிதங்கள் பிரசுரமாகிவிட்டன. பெங்களூர், பம்பாய் தினசரிகளில் அவை வந்தன. ஒரே கடிதம் இரண்டு பேப்பர்களில் வந்ததும் உண்டு! இந்தக் கடிதத்தை நீங்கள் பிரசுரித்தால் பிரசுரமான என் கடிதங்களின் எண்ணிக்கை 2000 ஆகிவிடும்! இவ்வளவு காலம் பொறுமையோடு என் கடிதங்களைப் படித்து வந்த வாசகர்களுக்கும் உங்களுக்கும் என் நன்றி.

இந்தக் கடிதத்துக்கு எக்ஸ்பிரஸ் கொடுத்திருந்த தலைப்பு: '2000 - நாட் அவுட்!'

-அனிதா ராமச்சந்திரன்



''அப்பா கிட்ட கேட்டியா?''

''அப்பா ஒண்ணும் சொல்ல மாட்டார்.''

''நீ சொல்றதே சீரியஸா இல்லே. புதுசா தோண்டற பிஸினஸ் ஏதாவது ஆரம்பிச்சிருக்கியா?''

''அப்படித்தான் வெச்சுக்க சார். ஒரு ப்ராப்பர்ட்டி இருக்குது. அதை வாங்கி அங்கே பள்ளம் தோண்டி ஏதாவது கிடைக்குதா பார்க்கணும், அவ்வளவுதான்.''

''ப்ராப்பர்ட்டி யாருது?''

''ஒரு பாகம் ப்ரைவேட் பார்ட்டி, மத்தது புறம்போக்கு, பஞ்சாயத்து நெலம்.''

''எங்கே இருக்கு?''

''பாலக்காடு போற வழியிலே.''

''அதை வாங்கித் தரணுமா?''

''வாங்கி அந்த இடத்திலே ஏதாவது மினரல் அம்புடுதா பார்க்கணும். அவ்வளவுதான். அவன் விரிக்க மாட்டானாம்.''

''சரி! நான் என்ன செய்யணும்?''

''அதை நீதான் சொல்லு! அய்யங்கார்!''

யோசித்தார் ''ஓஹோ!'' என்றார். ''சர்க்காருக்கு தெரிஞ்சு பண்ணணுமா? தெரியாமலா?''

''மூ: நல்லே தெரிஞ்சு பண்றதுக்கு என்ன ரூல்ஸ் சொல்லு.''

''நீ என்ன கேட்கிறேன்னே தெரியலே. ப்ராஸ்பெக்டிங் பண்றதா உத்தேசமா?''

''அதான்! ப்ராஸ்பெக்டிங்!''

''அதுக்கு லைசென்ஸ் வாங்கணும். ப்ராஸ்பெக்டிங் லைசென்ஸ்.''

''அது ஒண்ணு வாங்கித் தந்துடு!''

''அதுக்கு முந்தி ஒரு சர்ட்டிபிகேட்டுக்கு மனுப் போடணும். அந்த நிலத்தை நீ வாங்கணும்னு கூட அவசியமில்லே. சர்க்கார் நிலமா இருந்தா அதில் ஏதாவது கிடைக்கறதான்னு ப்ராஸ்பெக்ட் பண்றதுக்கு அவுங்க அனுமதிக்கலாம். அதுக்கு ஒரு லைசென்ஸ் இருக்கு. கலெக்டர் ஆபீஸுக்கு மனுப் போட்டா அவுங்க ஸ்டேட் ஜியாலஜிஸ்ட்டுக்கு அனுப்பிச்சு இண்டஸ்ட்ரீஸ் டிபார்ட்மெண்ட் செக்ரட்ரி....''

''ஸார் நீ சொல்றது ஒண்ணும் நம்ம ஸமஜ்ல வர்றதில்லே. எல்லாத்துக்கும் பந்தோபஸ்த் பண்ணிடுங்க. எங்கே கையெழுத்துப் போடணும் சொல்லுங்கோ. ப்ராப்பர்ட்டி ஒரு பாகம் ஒரு டீக்கடைக்காரன் வெச்சிருக்கான். தரமாட்டேன் சொல்றான்.''

''பட்டாவைப் பார்த்தியா?''

''இல்லே!''

''அதன்னு முதல்லே பார்க்கணும். சில வேளையில் என்க்ரோச்மெண்ட்டாக் கூட இருக்கும். நிலம் அவனிதாகவே இருக்காது!''

''பத்திரம் இருக்கு சொல்றான். ஆனா ஸேல் பண்ண மாட்டான்.''

''பார்த்துறலாம். வெள்ளிக்கிழமை கலெக்டர் ஆபீசில் ஃபாரம் ஏ ஒண்ணு வாங்கிண்டு வரேன். முதலில் அப்ரூவல் சர்ட்டிபிகேட்டு வேணும். அப்புறம் ப்ராஸ்பெக்டிங் லைசென்ஸ்.''

''வாங்கிக் கொடு! நான் வர்றேன்.''

''அப்பா எப்படி இருக்கார்?''



''நல்லா இருக்கார்'' என்று அவசரத்தில் ஓடினான்.

''பெரியவனைத் தூக்கிச் சாப்பிட்டுருவான் போல இருக்கு! இந்த வயசிலேயே ரத்தத்தில் இத்தனை பிஸினஸ்!''

வாசலில் மாலதி வர பிரேம் நின்றான்.

''ஹாய் மால்த்தி.''

''ஹாய் பிரேம்.''

''நம்ம வூட்டுக்கு ஏன் வர்றதே இல்லே? புதுசா ரிக்கார்ட்ஸ் வாங்கி இருக்குது. போனி எம் அப்பறம், ஆபா ஆ லே ஆ கேட்டிருக்கியா?''

''மாலதி!'' என்ற அதட்டும் குரல் உள்ளேயிருந்து கேட்க அவள், ''ஸீ யூ'' என்று ஓடினாள்! ப்ரேம் அங்கிருந்து ப்ரொபசர் சர்மாவின் வீட்டுக்குச் சென்றான்.

''அட யாம்பொண்ணு! சிங்கா நல்லூர்ல போயிட்டு இருக்கலாமல்லோ. நெலம் அவத்தால இவத்தால இருந்தா என்னவாம்? என்றெ பேச்சக் கேளு. நல்ல வெலைக்கு வந்தா வித்துரு!''

பெத்தாச்சி கட்டிலில் உட்கார்ந்திருக்கப் பெரியசாமி சற்று மரியாதையாகவே அருகில் நின்றான்.

''அப்பாரு நிலங்க, அதான்!''

''விக்க முடியாதாம்ல?'' என்றாள் திலகம்.

''யா....ரு சொன்னு? உம் பேர்லேதான் இருக்கு! வித்துப் போட்ரு கண்ணு!''

''ப்ச்! இது பளகின இடங்க!''

''சிங்காநல்லூர் மட்டும் என்னவாம்!''

''நா மாட்டாங்க!'' என்று தலையாட்டினான் பெரியசாமி.

''அழிச்சாட்டியம் பண்ற பொண்ணு! நானு பெரியவன் பேச்சைக் கேக்க மாட்டே?''

''எல்லாருஞ் சொல்லிப் போட்டம் பெரியப்பா!'' என்றாள் திலகம்; ''பொண்ணுக்கு வைத்தியம் பாத்தறலாம்ல? அவங்களே பார்க்கறன்றாங்க!''

''இல்லிங்க!''

''ராத்தவரும்மே குடிச்சப் போடறாருங்க! சொல்லி வைங்க!''

''இது எம் பொண்ணு!''

''இந்தா! திலகம்! ஏம் பொய் சொல்லாதே! எப்பனுச்சியும் ஒருக்கா குடிப்பானுங்க!''

''அது கூடயேதுக்கு? குடல் அரிக்க ஜல்லி மாரி ஆயிரும்! சினிமால காட்டினாங்க கிராமத்தில.''

பெரியசாமிக்குக் கோபம் வந்தது. கவுண்டரைப் பார்த்தான். எப்போது போகப் போகிறார்! ராத் தங்குவாரா? திலகத்தின் பெரியப்பா எழுபது வயதுக்குத் திடகாத்திரராக இருந்தார். கரிய கற்சட்டி போல முகத்தில் பெரிய பெரிய வெண் சிறகுகள் போல் மீசை. பப் என்று உட்கார்ந்து திலகம் தந்த



## களியாட்ட அரங்கு!

எழும்பூர் பாந்தியன் சாலையில் சிறுவர் சிறுமியர் போட்டி போட்டுக் கொண்டு ஜிம்மி களியாட்ட அரங்குக்குச் செல்கின்றனர். இது மோட்டார், டென்னிஸ், கால் பந்து களியாட்ட இயந்திரங்களின் இருப்பிடம். இவற்றில் நாலணா, எட்டணா நாணயங்களைப் போட்டுத்தான் கேளிக்கை விளையாட்டுக்களை ஒரு நிமிஷமோ மூன்று நிமிஷமோ ஆட இயலும்! சிறுவர் சிறுமியரின் திறமையைச் சோதிக்கவே இக் களியாட்டம். சூதாட்டமல்ல, பரிசுத் தொகை கிடையாது என்றாலும் பழக்கத்துக்கு அடிமையாகி ரொம்ப நேரம் இந்தக் களியாட்டத்தில் மூழ்கினால் நம்மை அறியாமல் பாக்கெட் காலியாகிவிடும். ஆபத்து உண்டு!

படம்: இருந்த இடத்தில் அமர்ந்தபடி ஆக்ஸிடென்டைத் தவிர்த்துக் காரை ஓட்ட முடியுமா? திறமைக்குச் சவால் விடும் ஒரு களியாட்டப் பெட்டி!

பி.எஸ்.எம்.

◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆

பன்னை மடியில் வைத்துக் கொண்டு மென்று மென்று மென்று கொண்டே பேசினார். அருகே மனோகரியைக் கட்டிக் கொண்டிருந்தார். உடம்பெல்லாம் மச்சங்கள்.

''ராத்திரி இருப்பீகளா?''

''என்ன இலகம்?''

இலகம் பதில் சொல்வதற்கு முன் ''அஞ்சு மணி பஸ் இப்ப வந்திருமில்ல?'' என்றான் பெரியசாமி.

இலகத்திற்குச் சுருக்கென்றது. பெரியப்பாவை ஏறக்குறைய போவென்று சொல்லுவது போல இருந்தது. அவர் மெதுவாக எழுந்து சரக்குப் பையை எடுத்துக் கொண்டு ''வரேன் பொன்னு! வரேங் கண்ணு!'' என்று நடந்தார். அவரை வழியனுப்பி விட்டு வந்த பெரியசாமி உடனே அவளைக் கோபித்தான்.

''இலகம்! என்ன நீ! தினமா நான் குடிக்கிறேன்?''

''ஆமாம்! ஒரு வாரமா அப்படித்தானே!''

''இனவன் ஊரெல்லாம் சொல்லிப்போடுவான்.''

''சொல்ல மாட்டாரு!''

''நீ செய்யறது நல்லாயிருக்கா?''

''குடிக்க மாட்டன்னு சொல்ல மாட்டிங்களா?''

''இந்த மாதிரி போற வற கண்டவங்க கிட்ட எல்லாம் புகார் செஞ்சா தினம் இல்ல வேளைக்கு வேளை குடிப்பன்!'' என்றான் அர்த்தமில்லாத கோபத்துடன்.

''உங்களுக்கு நல்லதுக்குத்தானே!''

''சும்மாயிருந்தா எனக்கு நல்லது!''

''அவரு என் பெரியப்பாரு! அவர் கிட்ட சொல்லாம வேற யார் கிட்ட சொல்லிக்குவேன். எனக்கு வேற யாரிருக்கா?''

''த! சும்மா புலம்பாதே!''

மனோகரி அம்மா அப்பாவின் வாயசைவுகளைக் கவனித்தாள். அப்பாவின் நெற்றி சுருங்கிப் பெரிசாக வாயைத் திறந்து கையைப் பெரிசாக ஆட்டி ஆட்டிப் பேசுறார். அம்மா கண்களில் ஜலம் வருகிறது. புடவைத் தலைப்பால் வாயைப் பொத்திக் கொள்கிறாள். மனோகரியும் சேர்ந்து அழ. பெரியசாமி இருவரையும் வெறுப்புடன் பார்த்து விட்டு. துண்டை உதறி விட்டு நேராக மெயின் ரோடு பக்கம் நடக்கிறான்.

அம்மா இன்னும் அழ மனோகரி அவள் புடவைத் தலைப்பைப் பிடித்து இழுத்து இடுப்பில் பிறண்டி ''வேண்டாம்மா, அழாதே'' என்று தலையாட்டிச் சைகை செய்தாள்.

மனோகரி எத்தனையோ சொல்ல விரும்பினாள். தன் தாயின் விழியோரத்தில் வழியும் கண்ணீர் முத்தை நிறுத்துவதற்கு அவள் நிறையச் சொல்ல விரும்பினாள். 'உ அ எ அ!' என்ற அமானுஷ்ய சத்தங்கள்தான் வெளி வந்தன. அவன் போய் ஒரு மணி ஆயிற்று. குடிக்கத்தான்! இலகம் தன் மகளை மார்புடன் அணைத்துக் கொண்டு கட்டிலில் உட்கார்ந்த போது கார் வந்து நின்றது! டிரைவர் சீட்டிலிருந்து ப்ரேமும் இந்தப் பக்கத்திலிருந்து ப்ரொபசர் சீனிவாச சர்மாவும் இறங்கி வந்தார்கள்.

இலகம் சட்டென்று கடைக்குள் நுழைந்து கொண்டாள்.

''பெரியசாமி பெரியசாமி'' என்றான் ப்ரேம்.

''அவரு இல்லீங்க! வெளியே போயிருக்காருங்க.''

''இவரு என் தோஸ்த் ஃபாதர்; நிலத்தைப் பார்க்கலாமா? எப்ப வரது பெரியசாமி?''

''தெரியலிங்க!''

''நிலம் பார்க்கலாமா சிஸ்டர்?''

''பாருங்க!'' என்றாள் தயக்கத்துடன்: ''ஆனு விக்கமாட்டன்னு சொல்லிட்டாரே!''

''கோவி பாத் நஹி! நீங்க போங்க சார் முன்னாலே.''

ப்ரொபசர் நேராக நடக்க ப்ரேம் சற்றுத் தயங்கி ஒரு சிகரெட்டை வாயில் பொருத்திக் கொண்டு பையைத் தொட்டுப் பார்த்து... கடைக்குள் வந்து ''தீப்பெட்டி இருக்குமா!'' என்றான்.

இலகம் தீப்பெட்டியை எடுத்துமகள்கையில் கொடுத்தாள். அவனிடம் சென்ட் வாசனை

அடித்தது: பாதங்கள் அவ்வளவு வெளுப்பாக இருந்தன.

பற்ற வைத்து ''இந்தாங்க!'' என்று திருப்பிக் கொடுக்கையில் நிலகத்தைத் தொட்டான்.

''ப்ரேம்! இங்க வாய்யா!'' என்று ப்ரொபசர் கூப்பிட வெளியே வந்தான்.

இன்னைக்குத் தலே சீவக்கூட இல்லே. முகம் கழுவக்கூட இல்லே என்று நிலகம் நினைத்தாள்.

ப்ரேம் நிலத்துக்கு வந்து மேலே இருந்த கற்களைப் பொறுக்கிப் பார்த்தான்.

''என்ன பார்த்தீங்களா?''

பேராசிரியர் ஒரு கல்லே லென்ஸ் மூலம் ஆராய்ந்து கொண்டிருந்தார். அலுவியல் ஸாயில்! எதிர்த்தாப்பல மலே! ''ப்ரேம்! இந்த இடத்தில் வைரம் கிடைக்கறதுக்கு நிறையச் சான்ஸ் இருக்கு! எக்ஸலண்ட் சான்ஸஸ்! ஒரு பைப்பு அகப்பட்டா போதும்.''

''பைப்பா?''

''பைப் லேன்னு சொல்வாங்க! பூமிக்கு அடியில் ஒரு பெரிய மலேப் பாம்பு மாதிரி ஒரு பைப் லேன்; அது எங்க இருக்குன்னு கண்டு பிடிச்சிட்டா....''

''கண்டு பிடிச்சுட்டா?''

''பூரா வைரமா இருக்கும்!''

''இந்த நிலத்திலே அது இருக்குமா?''

''இருக்கலாம்! அந்த பைப்புடைய வாய் எங்கேன்னு பார்க்கணும்! எதுக்கும் இந்த இடத்தை வாங்கிப் போட்டுடு! கொஞ்சம் கொஞ்சம் எக்ஸ்கவேட் பண்ணணும். இத பாரு? எல்லாம் மெட்டமார்ஃபிக்! நிறைய சான்ஸ் இருக்கு. வாங்கிடு வாங்கிடு! எப்படியாவது வாங்கிடு. இந்த ஏரியா முழுக்கத் தேடலாம். சின்னப் பெண்ணுக்கு இந்த இடத்தில் அகப்பட்டிருக்கு! அதனால் இந்த நிலத்தில் கிடைக்கறதுக்கு நிறைய சந்தர்ப்பம் இருக்கு!''

''தாங்ஸ் ப்ரொபசர்! எப்படியாவது வாங்கிப்புட்றேன்! அப்புறம் இந்த விஷயம் உங்க கிட்டயே இருக்கட்டும்! வக்கீல் கிட்ட ஒரு லைசென்ஸுக்கு அப்ளிகேஷன் போடச் சொல்லியிருக்கேன். கிட்டற வரைக்கும் கொஞ்சம் கப்சாப்பா இருந்தா நெல்லது!''

''சரி! சரி!''

''இது ஓனர்தான் கொஞ்சம் தகருர் பண்ணுவான் போல இருக்கு.''

''யார்ருவன் என் நிலத்தில?''

ப்ரேம் திடுக்கிட்டுத் திரும்பினன்.

''வந்துட்டியா, பெரியசாமி!''

''மறுபடி வந்துட்டியா சேட்டு! இது யாரு?'' பெரியசாமி ஆடினன். அவன் கண்கள் ஸ்திரமற்று ப்ரேமின் சட்டைப்பையின் மேல் பதிந்து ஆடியது.

''இன்னு சேட்! சும்மா சும்மா தொந்தரவு பண்றே! நிலம் கிடையாது. யார்ருவன் என் நிலத்தை கேக்குறது. என் நிலம், என் அப்பன் நிலம், என் பாட்டன் நிலம்'' மேலே இருந்து மண் எடுத்துத் தன் தலே மேல் போட்டுக் கொண்டு, ''என்ன வேணு செய்வேன். விக்க மாட்டேன்'' என்றுன்.

''விக்க வேண்டாம்! பெரியசாமி! விக்க வேண்டாம்'' என்றுன் ப்ரேம்.

பெரியசாமி புதிதாக நடை கற்றுக் கொண்ட குழந்தை போல் நடந்து வந்து ப்ரேமின் கன்னத்தில் பளீர் என்று அறையும் நோக்கத்துடன் ஒரு வீசு வீச, அவன் ஒதுங்கிக் கொள்ளத் தன் நிலத்தில் விழுந்தான்.

(தொடரும்)

---

# கடுகு பதில்கள்!



*His Holiness Sadguru Swami Shri Gnananandagiri Swamigal Thapovanam Tirukoilur (S. A.)*



*His Holiness Shri Yogi Suratkumar Ramji The Godchild Tiruvannamalai*

''ஞானாநந்த சத்குரு தேவா—
ஞானாநந்தமே!
ஞானாநந்த சத்குரு தேவா—
ஞானாநந்தமே!''

என்ற இனிமையான பாட்டைக் கேட்டுத் திரும்புகிறோம்.

அதோ வருகிறதே அந்த மோட்டார் வானிலிருந்தல்லவோ ஒலி பெருக்கி மூலம் ஒலிபரப்பப்படுகிறது! வானை நெருங்கிப் பார்க்கிறோம்.

''அகில இந்தியப் புனித பாத யாத்திரைக் குழு'' என்று கொட்டை எழுத்தில் பானர் கட்டியிருக்கிறார்கள். வானைச் சுற்றி ஆள் உயரத்தில் போட்டோக்கள் மாட்டப் பட்டிருக்கின்றன. எல்லாம் சாமியார்கள் படம். பின் பக்கத்தில் ஸ்ரீ ராம பட்டாபிஷேகப் படம். சாந்தம் தவழும் அந்தச் சாமியார்கள் படங்களின் மத்தியில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவரின் படமும் அருள் சொட்ட நிற்கிறது.

''இதெல்லாம் என்ன?'' என்று கெட்கத் தோன்றும் நமக்கு விடையளிக்க அந்த வானிலிருந்து நல்ல கட்டுமஸ்தான, கருத்த, ஆஜானுபாகுவான ஒருவர் இறங்குகிறார். இடுப்பில் நல்ல தூய்மையான வெள்ளை வேஷ்டி. உடலை மூட கைவைத்த தூய்மையான வெண்ணிறப் பனியன். முகத்தில் புன்சிரிப்பு.

ஒவ்வொரு படமாகக் குறிப்பிட்டு இவர்தான் ஸ்வாமி ஞானாநந்தகிரி, இவர் யோகி சூரத் குமார் ராம்ஜி, இவர் மௌன ஸ்வாமிகள், இவர் காஞ்சிப் பெரியவர். இது அன்னை மாயம்மா'' என்று விளக்குகிறார்.

''தென்னாற்காடு மாவட்டத்தில் திருக்கோயிலூர் பக்கத்தில் ''தபோவனம்'' உங்களுக்குத் தெரியாதா? அங்குதான் ஸ்ரீ ஞானாநந்த கிரி ஸ்வாமிகள் தங்கியிருந்து தம்மை நாடி வரும் அன்பர்களுக்கு உடற் பிணி முதல் பவப் பிணி வரை தீர்த்து அருள் புரிந்து வந்தார்கள்.

இவர் கன்னட தேசத்தில் மங்கள புரியில் அவதரித்து அதி பால்யத்திலேயே குடும்பத்தை விட்டு காஷ்மீரிலுள்ள ஜோதிர் மட பீடாதிபதியான, ஆதி சங்கரர் பரம்பரையைச் சேர்ந்த ஸ்ரீ சிவரத்ன கிரி மகாராஜ் என்பவரால் ஆட்கொள்ளப் பட்டு அவரது மறைவுக்குப் பிறகு அந்த பீடத்தைத் துறந்து இமய மலையில் பல காலம் குகைகளில் தங்கி ஆத்மானுபவத்தைப்

பெற்றவர். பாரத தேசம் முழுவதும் யாத்திரை செய்து இலங்கை முதலிய நாடுகளில் சுற்றி வந்து இந்த நூற்ருண்டின் ஆரம்பத்தில் திருக்கோயிலூருக்கு அருகே சித்தலிங்க மடம் என்ற சித்தர்கள் வாழும் ஸ்தலத்தில் தங்கி சுமார் இருபதாண்டுகளுக்கு முன் திருக்கோவிலூரிலிருந்து திருவண்ணுமலை செல்லும் சாலையில் இரண்டாவது மைலில் ஸ்ரீ ஞானநந்த தபோவனம் என்ற தவச் சாலையைத் தோற்றுவித்து அதில் தங்கியிருந்தார். 1974ம் ஆண்டு ஜனவரி 7ம் தேதி ஸ்வாமிகள் அங்கு மகா சமாதி யடைந்தார்கள். ஸ்வாமிகள் விட்டுச் சென்ற புனித கைங்கரியங்கள் இன்றும் தவருமல் அந்த தபோவனத்தில் நடை பெறுகின்றன. பல சந்நியாசிகளும் அடியார்களும் அங்கு தங்கியுள்ளனர்.

ஸ்வாமிகள் பெயருக்கேற்றுற் போல் ஒரு பழுத்த ஞானி! இவரைக் குருநாதராக அடைந்து பயனடைந்த பல தரப்பட்ட பக்தர்களின் மத்தியில், இந்த அடியேனும் ஒருவன். ஸ்வாமிகள் கட்டளைப்படி அவரால் அளிக்கப்பட்ட ''குரு பாதுகைகளையே'' என் கடவுளாகக் கொண்டு இப்படி தேச சஞ்சாரத்தில் இறங்கி விட்டேன் ஸ்வாமி'' என்கிருர் ராஜமாணிக்கம் என்ற பெயர் கொண்ட அந்தக் குழுவின் தலைவர்.

சென்னையில் இரண்டு வருடங்களுக்கு முன் ஆரம்பித்து தமிழ் நாடு பூராவும் கிராமம் கிராமமாகச் சென்று முகாம் செய்து அங்குள்ளோருக்கு பஜனை, சொற்பொழிவு முதலியவற்ருல் இறையுணர்வைப் பரப்பி, ஆங்காங்கு சிற்சில இடையூறுகள் இருந்தும் ஸ்வாமிகளின் பூரண அனுக்கிரகத்தினுல் இங்கு இனிதே வந்து சேர்ந்தோம். இரண்டு வருட முடிவை வருகிற 7—9—79 அன்று மயிலை ஸ்ரீ கபாலீஸ்வரர் கோவிலில் (முதலில் ஆரம்பித்த இடம்) கொண்டாட ஸ்ரீ ஞானநந்த கிரியின் சீடர்கள் ஏற்பாடு செய்துள்ளனர்'' என்கிருர் ஸ்ரீ ராஜமாணிக்கம்.

''ஸ்வாமிகளைப் பற்றி மேலும்...'' என்று நாம் இழுக்க, ''ஆமாம் ஸ்வாமி ஞானநந்தகிரி ஒரு பெருத்த கருணை கடல் — ஜாதி பேதமில்லாமல் சகலருக்கும் அருள் செய்த மனித தெய்வம். அவர் பெருமையைப் பேச நாட்களோ, மாதங்களோ போதாது. அவரைப் பற்றிப் பல புத்தகங்கள் வெளிவந்துள்ளன. ஸ்வாமி ''அபிஷிக்தாநந்தா என்கிற பிரெஞ்சுக்காரர் ''குருவும் சீடரும்'' என்ற தன் புத்தகத்தில் தான் ஸ்வாமிகளைச் சந்தித்துத் தனக்கு ஏற்பட்ட புனித அனுபவங்களை விரிவாக எழுதியுள்ளார். ''ஞான ஒலி'' என்ற புத்தகமும் ஸ்வாமிகளின் தீர்க்கமான ஞான அறிவைப் புலப்படுத்தித் தொகுக்கப்பட்டுள்ளது.

ஸ்வாமிகள் மகா சமாதி அடைவதற்கு முன் எங்களுக்குக் காட்டிக் கொடுத்த தற்பொழுது ஜீவிதர்களாக உலவி வரும் மகான்கள்தான் மற்ற படங்களில் உள்ளவர்கள். நாங்களும் அவர்களைச் சிக்கெனப்பிடித்துக்கொண்டு அவர்களின் உபதேசங்களைப் பெற்றுப் பயனடைகிருேம்.

இதில் யோகி சூரத் குமார் ராம்ஜி, தற்பொழுது திருவண்ணுமலை மலையடிவாரத்தில் உலவி வருகிருர்கள். மற்றவரில் ஒருவர் கசவனம்பட்டு, மற்றவர்கள் கன்யாகுமரி என்ற இடங்களில் தங்கியுள்ளனர்.

பித்தர்கள் போலும், பரதேசிகள் போலும் காட்சியளிக்கும் இந்த மகான்களின் பெருமையும், ஆன்மீக சக்தியும் நேரில் கண்டு அனுபவித்தவர்களுக்கே புரியும்'' என்று விவரிக்கிருர் ஸ்ரீ ராஜ மாணிக்கம்.

''ஸ்வாமி ஞானநந்த சத்குரு நாதா' என்று கூறும்போதெல்லாம் தழு தழுத்துப் போகிருர் இந்த அடியார். கண்களில் நீர் முட்டி நிற்கின்றது. முகம் பனிச்சென்று ''குருநாதரிடம்'' அவர் வைத்துள்ள பக்தி பரவசத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறது. மணிக் கணக்கில் கண் மூடித் தியானத்தில் ஆடாமல் அசையாமல் உட்கார்ந்து விடுகிருர்.

''மறுபடியும் பாத யாத்திரை எப்போது?'' என்று ஆரம்பிக்கும் நம்மை இடைமறித்து,

''ஆம் ஸ்வாமி. குருநாதர் கட்டளையிடுவார். நாங்கள் மறுபடியும் இந்த பாரத தேசம் முழுவதுமே சுற்றப் போகிருேம். குருநாதர் இட்ட கட்டளைதான் எங்கள் வாழ்வின் லட்சியம்''

நீங்களும் வாருங்கள். நாளைக் காலை மேல மாம்பலத்தில் ஓம் முருகா ஆஸ்ரமத்தில் எங்கள் பக்த சேவா நடக்கப் போகிறது. பக்தி பஜனைகளும் கடவுள் பிரமான சொற்பொழிவுகளும் உண்டு. வாழ்வின் கஷ்டங்களை மறந்து ஒரு சில மணி நேரமாவது நிம்மதி யடையலாம்'' என்று கூறிக்கொண்டே வானில் ஏறிக் கொள்கிருர் அந்த லட்சியவாதி.

''ஞானாநந்தா சத்குருநாதா— ஞானா நந்தமே'' என்ற நாமாவளி பக்க வாத்தியங்களுடன் மறுபடியும் வானம் முட்ட உணர்ச்சிப் பெருக்குடன் ஓரே கோரஸ்ஸாக அந்தக் குழுவினரால் பாடப்படுகிறது.

அந்த நாமம் நம் செவிகளில் புகுந்து நமக்கு ஒரு தெய்விக, புனித உணர்வை ஏற்படுத்தி ஒரு கண நேரம் மெய் சிலிர்க்க வைக்கிறது.

''எந்தரு மகானுபாவனு'' எந்தெந்த மூலையில் எப்பேர்ப்பட்ட மகான்கள் நமக்குத் தெரியாமல் இருக்கிறார்களோ? என்று அன்றொரு மகான் அங்கலாய்த்தது நமக்கு ஞாபகம் வருகிறது.

ஓம் முருகாஸ்ரமதாஸன்.

---

அகில இந்தியப் புனித யாத்திரைக் குழு தபோவனம் தவத்திரு ஸத்குரு ஞானானந்த கிரி ஸ்வாமிகள் அவர்கள், திருவண்ணாமலை எழுந்தருளியிருக்கும் மெய்ஞ்ஞானி ஸ்ரீ யோகி சுரத்குமார் ராம்ஜி அவர்கள் அனுக்கிரகத்துடன், பாத யாத்திரையாகப் பலவூர்களுக்குச் சென்று பேசியும் பஜனை செய்தும் மக்களுக்குக் கடவுள் உணர்வை இரண்டு ஆண்டுகளாக ஊட்டினர். இந்தக் குழுவினர் தமது முதல் கட்டத்தை முடித்துக் கொண்டு சென்னைக்கு வந்து சேருகின்றனர். அந்தக் குழுவினரைப் பாராட்டி போற்றுவதற்காக அன்பர்கள் அடங்கிய கூட்டம் ஒன்று 7–9–79 வெள்ளிக் கிழமையன்று மாலை 7 மணிக்கு மயிலை ஸ்ரீ கபாலீஸ்வரர் திருக்கோவிலில் நடைபெறும். அவ்வமயம் ஓய்வு பெற்ற உயர்நீதி மன்ற நீதிபதி திரு என். கிருஷ்ணசுவாமி ரெட்டியார் தலைமை தாங்குவார். திரு கி. வா. ஜகந்நாதன் (ஆசிரியர்: கலைமகள்), திரு எம். கே. பாலசுப்பிரமணியம், ஐ.ஏ.எஸ். (இயக்குநர்: பின் தங்கிய வகுப்பினர் நலத் துறை), திரு பொன் பரமகுரு (போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல்), மற்றும் பாத யாத்திரைக் குழுவின் தலைவர் திரு ஏ. ஆர். பி. என். ராஜமாணிக்கம் மற்றும் பலர் உரையாற்றுவார்கள். ஸ்ரீ ரமணி கோஷ்டியாரின் பஜனை நடைபெறும். அனைவரும் இந்த விழாவுக்கு வந்து சிறப்பிக்கக் கோரப்படுகிறார்கள்.






# தேங்காய்

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி ஸ்ரீசந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ சங்கராசாரிய ஸ்வாமிகள்

தேங்காய்க்கு நம் மதத்தில் ரொம்ப விசேஷம் கொடுத்திருக்கிறது. தென்னையை கல்பக விருக்ஷம் என்றே சொல்வதுண்டு. நாம் சின்ன வயசிலேயே ''தாளுண்ட நீரைத் தலையாலே தான் தருதலால்'' என்பதாக, அது சாக்கடைத்தண்ணீரைத் தன் வேரால் குடித்துவிட்டு, லோகத்துக்குப் பரம மதுரமான இளநீரைக் கொடுக்கும் கொடைக் குணத்தையும், தியாகத்தையும் பற்றிப் படித்திருக்கிறோம்.

கும்பத்திலே மூர்த்தியை ஆவாஹனம் பண்ணும்போது மேலே தேங்காய்தான் உட்கார்ந்திருக்கிறது. பூர்ண கும்பம் தந்து, மங்களமாக, மரியாதையாக வரவேற்கிற போது தேங்காய்தான் உச்சியில் இருக்கிறது.

எதற்கானாலும் வேண்டுதலையா, ''தேங்காய் உடைக்கிறேன்'' என்றுதான் சொல்லுகிறோம்.

தேங்காயை மட்டும் முழுசாக அப்படியே வைக்காமல், குடுமியைப் பிய்த்து, இரண்டாக உடைத்துத்தான் நிவேதனம் செய்ய வேண்டும். ''நாரிகேலம்'' என்று நைவேத்தியத்தின்போது சொல்லாமல், ''நாரிகேல கண்ட த்வயம்'' — இரண்டாக உடைத்த தேங்காய் — என்றே சொல்லும்படிதான் பூஜா விதி இருக்கிறது. இதிலே ஒரு பெரிய தத்வம் இருக்கிறது. தேங்காய் ஓட்டோடு இருக்கிற போது உருண்டையாக லோகம் மாதிரி இருக்கிறது. லோக மாயை கெட்டியாக நம்மை மூடிக் கொண்டிருக்கிறதோ இல்லையோ, அதுதான் தேங்காய் ஓடு. அதிலிருந்து நார் நாராக வருகிறது அத்தனையும் ஆசா பந்தங்கள். இப்படி ஆசாமயமாக இல்லாமல், அநேக துராசைகளைத் தள்ளி, பாக்கி சில தர்ம நியாயமான ஆசைகளை மட்டும் வைத்துக் கொண்டு கிருஹஸ்த தர்மத்தை அநுஷ்டிக்க வேண்டும். இந்த ஆசைகளும் தலைவிரி கோலமாக ஆடாமல் ஒன்றாகச் சேர்ந்து, சாஸ்திரக் கட்டுக்குள் இருக்க வேண்டும்; இதைக் காட்டத்தான் கிருஹஸ்தன் தலையிலே பெரும்பாலான கேசத்தை க்ஷௌரம் செய்து கொண்டு (மழித்துக் கொண்டு) கொஞ்சத்தை மட்டும் வைத்துக் கொண்டு, அதையும் சிகை என்பதாகச் சேர்த்துக் கட்டிக் கொள்கிறான். இது குடும்பிக்கு (குடும்பம் நடத்தும் இல்லறத்தானுக்கு) அடையாளம். 'குடும்பி' என்பதுதான் 'குடுமி' என்று வந்துவிட்டது. குடும்பமில்லாத சந்நியாசி மொட்டைத் தலைக்காரன்தானே?





## பூனைக்கண் ரகசியம்!

பூனையின் கண்கள் இருட்டில் ஒளிரும் என்று நாம் நினைப்பது தவறு. . மின்மினிப் பூச்சிக்கு மட்டும்தான் தானே ஒளியை வெளிப்படுத்தும் சக்தி இருக்கிறது. ஆனால் பூனைக்கு அந்தச் சக்தி இல்லை. இருப்பினும் இருட்டில் நுழையும் சிறு ஒளியைக் கூடப் பிரதிபலிக்கும் சக்தி பூனையின் கண்களுக்கு உண்டு. அதனால் சிறிதளவாவது ஒளி இருந்தால்தான் பூனையின் கண் பிரகாசிக்கும். சுத்தமான இருட்டில் பூனையின் கண் ஒளிராது. - -சம்பத் குமாரி

ஆதாரம்: 'விஸ்டம்'

இந்த மாதிரி, தேங்காய்க்கும் மற்ற நாரைப் பிய்த்து விட்டுக் குடுமியை மட்டும் விட்டு விடுகிறோம்.

முதலில் ஆசைகளைக் கட்டுப்படுத்தக் குடும்பம் வேண்டும். அப்புறம் இதில் ஜயித்த பின் சந்நியாசம். குடும்பத்திலேயே இருக்கிறபோதுகூட பகவானிடம் போகிறபோது, தேங்காயை அர்ப்பணம் பண்ணுகிற அந்த க்ஷண காலத்திலாவது துளிக்கூட ஆசையே இல்லாமல், பரமாத்ம சொரூபத்தை ஒன்றி யிருந்து நினைக்க வேண்டும். அதற்காகத்தான் அப்போது தேங்காயின் குடுமியைப் பிய்த்து விடுவது. குடும்பம் போன விட்டு, மாயை ஓடும் உடைகிறது. உள்ளே வெள்ளை வெளேரென்று சுத்த ஸத்வமான பரமாத்மா இருப்பது எப்படித் தெரியும்? உடைத்தால்தானே தெரியும்? அதனால் உடைக்கிறோம். வெளுப்பான பருப்பு இரண்டு பாதியாகி, ஒன்று பரமாத்மா, இன்னொன்று ஜீவாத்மா, ஆனால் இரண்டும் ஒரே சரக்குத்தான் என்று காட்டுகிறது.. மதுரமான இளநீர்தான் பரமாத்மாநுபவத்தில் உண்டாகிற பேரானந்தம்.

இப்படி நான் ரொம்ப வேதாந்த வைராக்கியமாக அர்த்தம் சொன்னாலும், நடைமுறையில் ஆசைகள் நிறைவேறுவதற்கே தேங்காய் உடைப்பது என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். இங்கிலீஷ்காரன் 'Thank God' என்கிறானே அதைப் பற்றி நான் வேடிக்கையாக ஒன்று கல்பனை பண்ணினேன். தமிழ்த்தேசத்தில் எந்த அபீஷ்டம் பூர்த்தியானாலும் ''தேங்கா ஒடை'', ''தேங்கா ஒடை'' என்கிறதை அவன் கேட்டான். வேகமாகச் சேர்த்துச் சொல்வது, 'தேங்காடை'', ''தேங்காடை'' என்று அவன் காதில் பட்டது. திருவல்லிக்கேணியை 'ட்ரிப்ளிகேன்' என்று புரிந்து கொண்டவன்தானே? 'ஐ' என்பது இரண்டாவது வேற்றுமைக்கு அடையாளம் என்றுதமிழ் நாட்டில் இருந்து வந்ததால் அவனுக்குத் தெரியும், புரிந்து கொண்டு தேங்காடை என்பதைத் தேங்காட்-ஐ என்றுபிரித்துக் கொண்டான். ஒரு காரியம் நிறைவேறினால் பகவானுக்கு நன்றி தெரிவிக்கிற Thanks giving தானே தேங்காய் உடைப்பது? அதனால் 'தேங்காட்' என்பதை ''தேங்க் காட்'' என்று இரண்டாகப் பிரித்துக் கொண்டு தேங்க் (Thank) நன்றி ஆனதால் பாக்கி நிற்கிற காட் (God) தான் பகவான் என்று வைத்துக் கொண்டு விட்டான்! இந்தவேடிக்கை எப்படியானாலும் நாம் God ஐத் thank பண்ணத் தேங்காய் தான் உபயோகமாகிறது! விக்நேச்வரர் விஷயத்திலோ இரண்டாக உடைக்காமல், சிதறு காயாகப் போட்டு, அத்தனை சில்லுகளும் ஏழைக் குழந்தைகளுக்கே போகும்படி சாஸ்திரம் செய்கிறது.

மூன்று கண் உடைய தேங்காயை ''த்ரிநேத்ரதாரி'' என்று சொல்லிப் பரமேச்வரனுடன் சிலேஷை(சிலேடை) பண்ணுவதுண்டு. ஸமீபத்தில் அதற்கு விஷ்ணு ஸம்பந்தமும் கேட்டு (அதுவும் ஒரு சிவாசாரியரே அதைச் சொல்லக் கேட்டு)ஆச்சரியப்பட்டேன். தேங்காயைப் பார்த்தால் அதில் மூன்று பாகங்களாய்த் தடித்த மூன்று கோடுகள் போவது தெரியும். அது வைஷ்ணவர்களின் நாமத்தைக் குறிக்கிறது என்று அந்தச் சிவாசாரியார் சொன்னார். இப்படிச் சைவ வைஷ்ணவ சமரசத்துக்கும் தேங்காய் அடையாளமாயிருக்கிறது.

நம் அஹங்கார ஓட்டைப் பிளந்து உள்ளே இருக்கிற ஞானப் பருப்பையும், ஆனந்த இளநீரையும் காட்டிக் கொடுக்க வேண்டும் என்ற ஒரே வேண்டுதலோடு பகவானுக்குத் தேங்காய் உடைப்போமாக!

"மாணவிகள் போராட்டம்" —ஜஜ்ஜஜா!




தந்தை: கல்லூரியில் என் பெண்ணைச் சேர்ப்பதற்குப் புதுக் கண்டிஷன் ஒன்று சொன்னீங்களே அது என்ன?

பிரின்ஸிபால்: ஆமாம். உங்க பெண் கல்லூரிப் போராட்டத்துல கலந்துக்க மாட்டேன்னு இந்த பாரத்திலே கையெழுத்துப் போட்டுக் கொடுக்கணும்!

⌘

அவர்: என்னப்பா இது... போலீஸ்காரங்க பாட்டுக்குக் கண்ணீர்ப் புகை அடிக்கிறாங்க அந்தப் பொம்பளைங்க கண்ணீரே விடாமல் கத்தறாங்களே!

இவர்: அவங்க வீட்டுல தினம் வெங்காயம் உரிக்கப் பழக்கம் இருக்கும்... அதான்!

⌘

ரங்கு: ஏண்டா ஒரு மாதிரி இருக்கே?

மங்கு: என் தங்கை படிக்கிற காலேஜுலே பேண்ட், ஷர்ட் எல்லாம் போட்டுண்டு வரலாம்னு சொல்லிட்டாங்க.

ரங்கு: அது சரி. அதுக்கு நீ ஏன் வருத்தப் படறே?

மங்கு: ஆமாம். அவ இனிமேல் என் பாண்ட், ஷர்ட்டை அல்லவா போட்டுக்க ஆரம்பிச்சுடுவா!

—எஸ். பிரகாஷ்

# கடல் ராணி

சாண்டில்யன்

## அத்தியாயம் 6

## சந்திக்க ஓர் இடம்

வரலாற்றுக் கதைகள் ஜீவ காவியங்களாக அமைவதற்கு முக்கிய காரணம் ஒன்று உண்டு. காலத்தால் அழியாத, அவ்வப்போது ஏற்படும் சமுதாய மாறுபாடுகளால் மறையாத, வரலாற்று நிகழ்ச்சிகளையும் பாத்திரங்களையும் அஸ்திவாரமாகக் கொண்டு புனையப்படுவதால் சரித்திரக் கதைகள் இலக்கியத்தில் சாகவரமான இடத்தைப் பெறுகின்றன. மக்கள் மனத்தில் நிலைத்தும் நின்று விடுகின்றன. உதாரணமாக ராபர்ட் லூயி ஸ்டீவன்ஸன் தமது 'ட்ரஷர் ஐலண்ட்' என்ற நாவலில் சிருஷ்டித்துள்ள சிறந்த கதாபாத்திரமான லாங் ஜான் ஸில்வர் அரபிக் கடல் பிராந்தியத்திலிருந்த பல கொள்ளைக்காரர்களில் ஒருவனென்றும்,— அவன் மலையாளத்திலிருந்து வந்த வெள்ளைக்கார மாலுமி யென்றும் சொன்னால் இலக்கிய மாணவர்களுக்கு வியப்பாயிருக்கலாமென்றாலும், உண்மை அது தான். காஸண்ட்ரா கப்பலில் சிறைப்பட்டுக் கொள்ளைக்கார டெய்லரால் தாக்கிவிடப் படவிருந்த பிரிட்டிஷ் காப்டன் மக்ரேயைக் காத்தவன் இந்த ஒற்றைக் கால் கொள்ளைக்காரன் என்பதைச் சரித்திரம் கூறுகிறது. இந்த நிகழ்ச்சியிலிருந்துதான் *ராபர்ட் லூயி ஸ்டீவன்ஸன் ஒற்றைக் கால் லாங் ஜான் ஸில்வரை சிருஷ்டித்திருக்க வேண்டும். இப்பொழுது லாங் ஜான் ஸில்வர் ஆங்கில இலக்கியத்தின் சிறப்புப் பாத்திரங்களில் ஒருவன். இவனை மட்டுமின்றி காஸண்ட்ரா என்ற கப்பலைப் பற்றியும் மலபாரைப் பற்றியும் ஸில்வர் வாயிலாகவே ஸ்டீவன்ஸன் தமது கதையில் பிரஸ்தாபிக்கிறார். இப்படி ராபர்ட் லூயி ஸ்டீவன்ஸனுக்குக் கை கொடுத்தவனும், நிதானம், மரியாதை, பணிவு, கொடுமை, தந்திரம், சக்தி இவற்றைக் குணங்களாக உடையவனென்று அவரால் சித்திரிக்கப்பட்டவனுமான ஸில்வர், பாண்டவர் கோட்டையில் அன்று இந்திரஜித் அனந்தின் கைத்துப்பாக்கி உலவுவதைக் கவனித்ததும் சிறிது எச்சரிக்கையே அடைந்தான். எச்சரிக்கை அடைந்த காரணத்தால் மறு விநாடி அவனுடைய தோரணையில் பெரும் மாற்றம் ஏற்பட்டதன்றி பழைய அந்த நகைப்பு மீண்டும் அந்தக் கருங்கல் அறையில் தாக்கி எதிரொலிக்கச் செய்தது. "இங்க்லாண்ட்! எதையும் செய்ய முயலாதே. அனந்தின் கைத் துப்பாக்கி குறி தவறாதது. மூன்று பேரை ஒரே சமயத்தில் சுட்டுத்தான் இவன் என்னைக் காப்பாற்றி அழைத்து வந்தான்" என்று இங்க்லாண்டையும் அடக்கினான் ஸில்வர்.

பிரசித்தி வாய்ந்த கடல் கொள்ளைக்காரனான இங்க்லண்ட் அந்த ஒற்றைக்கால் மனிதனின் போக்கைக் கண்டு பெரு வியப்படைந்தான். "ஸில்வர்! நீயா இப்படிப் பேசுகிறாய்?" என்று வினவவும் செய்தான் வியப்பு குரலிலும் ஒலிக்க.

ஸில்வர் தனது கொடிய விழிகளை இங்க்லண்ட் மீது திருப்பி, "எப்படிப் பேசுகிறேன்?" என்று வினவினான்.

"இன்னொரு மனிதனின் மிரட்டலுக்கு நீ அடங்கிப் பேசுவதை இன்றுதான் பார்க்கிறேன்" என்றான் இங்க்லண்ட் வெறுப்பு மண்டிய குரலில்.

"அடங்க வேண்டிய சமயத்தில் அடங்குபவன்தான் அறிவாளி" என்று சொன்ன ஸில்வர், "இங்க்லண்ட்! மை பாய்! யூ டோண்ட் வாண்ட் டு டை, டூ யூ? (இங்க்லண்ட்! தம்பி! இறக்க இஷ்டமில்லையே உனக்கு?)" என்றும் வினவினான்.

இங்க்லண்ட் பதில் ஏதும் சொல்லவில்லை. நீலமணிகள் போன்ற அவன் கண்களில் நெருப்புப் பொறி பறந்தது.

---

*"Stevenson in his Treasure Island evidently took his idea of Long John Silver the one legged pirate from this incident" —The Pirates of Malabar By col. John Biddulph P. 139

அந்தக் கண்களில் ஒளிவிட்ட எரிச்சலையும் ஆவேசத்தையும் வில்வர் கண்டான். அதைக் கண்டு லேசாக நகைத்தான். ஒரு முறை சற்றே எழுந்த தனது கைத் துப்பாக்கியிலிருந்து கையை எடுத்து அதை மீண்டும் பெல்ட்டில் அழுத்தினான் மற்ற துப்பாக்கிகளுடன். அவன் காட்டிய குறிப்பை உணர்ந்த இங்கலண்டும் தனது ரிவால்வர் மீதிருந்த கையை எடுத்துப் பக்கவாட்டில் தொங்க விட்டுக் கொண்டான்.

அப்பொழுது சொன்னான் வில்வர், ''அனந்த்! உன் ரிவால்வரையும் கச்சையில் சொருகிக்கொள், இனி அதற்குத் தேவையில்லை'' என்று.

அனந்த் பதிலேதும் சொல்லாமல் தனது கைத் துப்பாக்கியையும் இடையில் சொருகிக் கொண்டு வில்வரை நோக்கி, ''ஐ ஆம் ஸாரி வில்வர். பட் யூ லெப்ட் மி நோ ஆல்டர்நெடிவ் (வருந்துகிறேன் வில்வர். ஆனால் எனக்கு வேறு வழியை விட வில்லை நீ'') என்று கூறினான் வருத்தம் தோய்ந்த குரலில். மேலும் சொன்னான் அனந்த்: ''வில்வர்! நான் இங்கு வந்தது கொள்ளைக்காரர்களைப் பிடிக்க அல்ல; அவர்களை அழிக்கவும் அல்ல. அப்படிப் பிடித்து அழிக்கும் அலுவலை மேற்கொண்டால் கொள்ளைக்காரர்களில் சிறந்த உன்னைக் காப்பாற்றியிருக்க மாட்டேன். நான் வந்த காரணம் கொள்ளைக்காரர்கள் ஒழிப்பென்றால் அதற்கு நான் சிந்து தூர்க்கம் வந்திருக்க மாட்டேன். இத்தகைய ஒரு பயங்கரக் கொள்ளைக்காரியைக் காப்பாற்றியும் இருக்க மாட்டேன்.''

இந்தச் சொற்களை நிதானமாகவும் திடமாகவும் சொன்ன அனந்த் கடைசியாகக் கடல் ராணியையும் தன் கையால் சுட்டிக் காட்டினான்.

அனந்தின் சொற்களைக் கேட்ட கடல் ராணி புன்முறுவல் கொண்டாள். அவள் அழகிய பெரு விழிகள் அவனைப் பார்த்து நகைத்தன. புன்முறுவலை வெளி விட அவள் உதடுகளை விரித்த



போது அவள் அழகிய வழுவழுத்த கன்னங்களில் குழிகள் விழுந்து அந்த முகத்துக்கு ரதி விலாஸச் சாயையை அளித்தன. ''உங்கள் பாராட்டுதலுக்கு எனது நன்றி'' என்று கடைசியாக அவள் பேசியபோது குரலிலிருந்த கடுமை மறைந்து மதுரம் சொட்டியதை அனந்த் கவனித்தான்.

ஆனால் அவள் சொற்களோ முக விலாசமோ அனந்தின் முகத்தில் எந்த வித மாறுதலையும் விளைவிக்கவில்லை. அவன் கண்கள் அப்பொழுதும் அரைவாசி மூடியே இருந்தன. கருங்கல் சுவரில் பதிந்த காலும் பதிந்தபடியே இருந்தது. அவன் பதிலிலும் உணர்ச்சி அதிகம் இல்லை. ''ராணி! அளவுக்கு மீறி நான் எதையும் சொல்லவில்லை. மால்வான் கடற் கொள்ளைக்காரர்கள், கொள்ளைக்காரர்களிலேயே மிகக்கொடியவர்கள், சிறந்தவர்கள் என்ற பிரசித்தி இருக்கிறது. அவர்களின் தலைவி நீ. *மால்வானின் மூன்று பிரிவுகளானசிந்து துர்க்கம், பாண்டவ கட்மால், வான் கோட்டை மூன்றையும் நீ தனிப்பட ஆள்கிறாய். உன்னைப் பற்றி எனக்குச் சகலமும் தெரியும்'' என்ற அனந்த் மற்ற இருவரையும் நோக்கி, ''நான் சொன்னதில் தவறு ஏதேனும் உண்டா?'' என்று வினவினான்.

அனந்த் சொன்ன அனைத்தும் உண்மை என்பதைப் புரிந்து கொண்டிருந்த வில்வர் பதிலேதும் சொல்லவில்லையானாலும் இங்லண்ட் மட்டும் ''அத்தகைய கொடியவளிடம் நாம் சிக்கி யிருக்கிறோம். அவளைக் காக்க நீ எங்களை நோக்கித் துப்பாக்கியை எடுத்தாய்'' என்று குற்றம் சாட்டினான்.

அனந்த் அந்தக் குற்றச்சாட்டுதலை ஒரு கையை வீசி அது அர்த்தமற்றது என்பதை விளக்கினான். ''டாக்ஸ்டோன்ட் ஈட் டாக் (நாய்கள் நாயைத் தின்பதில்லை)'' என்றும் வெறுப்புடன் சொன்னான்.

அந்த ஆங்கில வார்த்தையைக் கேட்டு நீண்ட நாளானதால் வில்வர் மிகுந்த குதூகலத்தைக் காட்டினான். ''மை பாய் அனந்த்! யூ மஸ்ட் ஹாவ் பீன் பார்ன் இன் இங்லண்ட். யூ ஸ்பீக் பர்பெக்ட் இங்லீஷ் (தம்பி அனந்த்! நீ இங்கிலாந்தில் பிறந்திருக்க வேண்டும். நீ நல்ல ஆங்கிலம் பேசுகிறாய்)'' என்று பாராட்டிய அவன் குரலில் உற்சாகம் மிதமிஞ்சி ஒலித்தது.

அதுவரை முகத்தைப் பந்து போல் உப்பி விட்டு சினந்திருந்த காப்டன் இங்லண்டின் முகமும் விகசித்தது. ''ஷ்யூர்! யூ ஸ்பீக் பைன் இங்லிஷ் (உண்மை. நீ நல்ல ஆங்கிலம் பேசுகிறாய்)'' என்ற அவன் பாராட்டுதலில் குரோதம் சிறிதும் இல்லை. அன்புகூட ஏதோ ஒரு மூலையில் ஒலித்தது.

அந்த ஆங்கிலேயர் இருவருக்கும் தங்கள் மொழியைச் சரியாகப் பேசியதும் ஏற்பட்ட ஆனந்தத்தைக் கண்டு அனந்த் பெருமூச்சு விட்டான். ''சுய மொழி பக்தியால் தேச பக்தியும் அதிகமாகிறது. அந்த அறிவு நமது நாட்டில் சிறிதும் இல்லையே. ஒன்று படாடோபத்துக்காகச் சுயமொழி வெறி. அல்லது சுயமொழி இழிவு. இவற்றைத் தவிர இங்கு வேறென்ன இருக்கிறது? அப்படிச் சுயமொழி பக்தியும் அறிவில் ஆசையும் இல்லாத நாட்டில் வளர்ச்சி ஏது. வீரம் ஏது. நாட்டுப் பற்றுதான் ஏது?'' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட அனந்த் வெளிப்படையாக வில்வரை நோக்கிச் சொன்னான். ''வில்வர்! உனக்கும் இந்திய மொழிகள் பலவும் தெரியும். மலையாளம், மராத்தி இரண்டுமே உனக்குக் கைவந்த மொழிகளாயிற்றே'' என்று.

அதை ஆமோதிப்பதற்கு அறிகுறியாக வில்வர் தனது தலையையொரு புறமாக அசைத்தான். ''இந்தநாட்டில் பிழைக்க வேண்டுமானால் இந்த நாட்டு மொழி தெரிய வேண்டாமா? அதற்காகக் கற்றுக் கொண்டேன். பிழைப்புக்காகக் கற்கும் மொழி வேறு. ரத்தத்தில் ஓடும் பிறவி மொழிவேறு'' என்றும் கூறினான் வில்வர்.

---

* Malvani Pirates were said to be very cruel and daring. "Maharashtra gazetteer Ratnagiri Dt. P.P. 773-774.

அதுவரை மௌனமாயிருந்த கடல் ராணி உரையாடலில் குறுக்கே புகுந்து. ''நாம் இங்கு கூடியிருப்பது மொழிச் சர்ச்சைக்காக அல்லவென்று நினைக்கிறேன்'' என்றாள். அவள் குரல் மிக நயமாயிருந்தது. அதில் வெறுப்பு கடுகளவும் இல்லை.

அவள் சொல்வது இங்க்லண்ட் வில்வர் இருவருக்கும் நியாயமாகப் பட்டதால் இருவரும் அவளைக் கேள்வி கேட்கும் பாவனையில் நோக்கினார்கள். கேள்விக்குப் பதில் அவளிடமிருந்து வருவதற்குப் பதிலாக அனந்திடமிருந்து வந்தது. ''அடுத்த இரண்டு நாட்களுக்கு உங்களைத் தன் விருந்தாளிகளாக வைத்திருக்க ராணி விரும்புகிறாள்'' என்று அனந்த் பணிவு நிரம்பிய குரலில் வேண்டிக்கொண்டான்.

''எங்களையா?'' இங்க்லண்ட் பிரமிப்புடன் கேட்டான்.

''விருந்தினர்களாகவா கைதிகளாகவா?'' வில்வரின் குரல் சாதாரணமாகத்தான் இருந்தது. ஆனால் விழிகளில் ஒரு பயங்கரச் சாயை படர்ந்தது.

''விருந்தினர்களைக் கைது செய்வது ராணியின் வழக்கமல்ல!'' இந்திரஜித் அனந்த் திட்டமாகத் தெரிவித்தான்.

''ராணி ஏதும் சொல்லவில்லையே?'' என்று கேட்டான் வில்வர்.

''நான் தனிப்பட ஏதும் சொல்ல அவசியமில்லை'' என்றாள் ராணி.

''அனந்த் சொன்னால் நீ சொன்ன மாதிரிதானா?'' வில்வர் கேட்டான் வியப்புடன்.

''ஆம்''. ராணியின் பதில் திட்டமாயிருந்தது.

''அனந்தை எத்தனை நாட்களாக உனக்குத் தெரியும்?'' என்று இங்க்லண்ட் வினவினான்.

''இன்று காலை முதல்.''

''முன்பு தெரியாது?''

''தெரியாது.''

''அதற்குள் அவனிடம் பூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டதா?''

''ஆம்.''

''ஏனோ?''

''அவரைப் பார்த்ததில்லையே தவிர அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்.''

இதற்குப் பிறகு ராணி அதிகமாகப் பேச மறுத்தாள். ''வில்வர்! இங்க்லண்ட்! நீங்கள் இருவரும், ஏன் நேற்று என்னைப் பிடித்துப் போக வந்த ஸ்டாண்டன், ஸ்மித் இருவருங்கூட இன்றும் நாளையும் விருந்தினராயிருங்கள். அதற்குப் பிறகு உங்களை என்ன செய்வது என்று முடிவு செய்கிறேன். இந்த இரண்டு நாட்களும் இந்தப் பாண்டவர் கோட்டையில் எங்கு வேண்டுமானாலும் சுதந்திரமாக உலவலாம். உங்களுக்குச் சகல வசதிகளும் செய்து தரப்படும். ஆனால் தப்ப மட்டும் முயலாதீர்கள்'' என்று உத்தரவு பிறப்பித்த ராணி அனந்தைத் தன்னுடன் வரும்படி சைகை செய்து அந்த அறையை விட்டு வெளியேறினாள்.

அனந்த் ஒரு விநாடி ஏதோ சிந்தித்தான். பிறகு, ''வில்வர்? இங்க்லண்ட்! இருவரும் இங்கேயே இருங்கள். மீண்டும் வருகிறேன்'' என்று கூறிவிட்டு அறையிலிருந்து வெளியேறி ராணியைத் தொடர்ந்து சென்றான். ராணி அவன் பின்தொடர்ந்து வருவதைத் திரும்பிப் பார்க்காமல் சென்றாள். அனந்த் அவளைப் பின்பற்றி அவள் நடைக்கு ஈடுகொடுக்க சிறிது வேகமாகவே நடந்தான். ராணி விடுவிடுவென்று நடந்து மாளுமிகள் விடுதியிலிருந்து வெளியே வந்து படிகளில் இறங்கினாள் வேகமாக. அனந்தும் அவள் துரிதத்துக்கு ஈடு கொடுத்துப் படிகளில் இறங்கிச் சென்றான். ராணி எட்ட இருந்த மாளிகையை நோக்கி நடக்க முற்பட்டதும் அனந்த் சட்டென்று நின்று, ''ராணி!'' என்று அதட்டலான குரலில் அழைத்தான்.

ராணி நின்று தலையை அரைவாசி திருப்பி அனந்தைக் கவனித்தாள், கண்களின் ஓரத்திலும். ''என்ன?'' என்றும் வினவினாள் அதிகாரத்துடன்.

''நான் உன்னுடன் வர முடியாது இப்பொழுது'' என்றான் அனந்த்.

''ஏன்?'' ராணியின் கேள்வியில் சந்தேகம் இருந்தது.

''எனது நண்பர்களை நான் கவனிக்க வேண்டும். பிறகு சந்திக்கிறேன் உன்னை'' என்றான் அனந்த்.

''எப்பொழுது?''

''இன்று மாலை.''

''எங்கு?''

அனந்த் சிறிது சிந்தித்தான். ராணியின் இதழ்களில் புன்முறுவல் விரிந்தது மெல்ல. ''சரி. இன்று விளக்கு வைத்ததும் அதோ அந்தத் தென்னஞ் சோலைக்கு வாருங்கள்'' என்று கூறிவிட்டு வேகமாகத் தனது மாளிகையை நோக்கி நடந்தாள் ராணி.

அவள் செல்வதைக் கவனித்துக் கொண்டே நின்றிருந்தான் அனந்த்.

''அடி ராணி! உன் கள்ளத்தனம் எனக்குத் தெரியாதென்று நினைக்காதே. உன்னை அடக்குகிற முறையில் அடக்குகிறேன்'' என்று மனத்துள் கறுவிக் கொண்டான். அது விளைத்த சினத்துடன் மாலையில் நிகழவிருந்த தென்னஞ் சோலைச் சந்திப்பின் எதிர்பார்ப்பினால் ஏற்பட்ட சந்துஷ்டியும் கலந்து கொண்டதால் அவன் இதழ்களில் இரண்டும் கலந்த புன்முறுவல் மலர்ந்தது.

(தொடரும்)



## 16 அங்குல சுருட்டு!

ஒரு முறை வின்ஸ்டன் சர்ச்சிலுக்குப் பரிசாக ஒரு பதினாறு அங்குல நீளமுள்ள சுருட்டு வந்தது! உலகத்திலேயே இதுதான் பெரிய சுருட்டு. அதை அனுப்பியவர் பிரிஸ்டல் நகரத்தைச் சேர்ந்தவர். அந்தச் சுருட்டு போர் நடந்தபோது பெல்ஜியத்தில் தயார் செய்யப்பட்டது. அந்தச் சுருட்டைப் புகைத்து முடிக்க மொத்தம் ஆறு மணி நேரமாகும். -அ. இராமச்சந்திரன்



# முதல் டெஸ்டுக்கு முகமன் கூறுகிறோம்!

பதினைந்து இளைஞர்கள் தலை தெறிக்க ஓடுகிறார்கள்! அவர்களைப் பின்தொடர்ந்து ஒரு Physio Therapist ஓடிக் கொண்டிருக்கிறார்! பதினைந்து பேரும் ஓரிடத்தில் அணி வகுத்து நின்று கைகளை உயர்த்தித் தாழ்த்துகிறார்கள். துண்டை விரித்துப் போட்டுப் பல ஆசனங்களைச் செய்கிறார்கள்.

சுவரை வைத்துத்தானே சித்திரம் எழுத வேண்டும். நூறு சதம் தங்கள் உடலைக் கச்சிதமாக வைத்துக் கொள்ளவே இந்த மாதிரி பயிற்சிகளை ஆஸ்திரேலியக் கிரிக்கெட் இளம் குழுவினர் மேற்கொள்கிறார்கள்.

ஆஸ்திரேலியக் கிரிக்கெட் பட்டாளம் சேப்பாக்கம் சிதம்பரம் மைதானத்தில் ஒரு வாரம் தண்டு இறங்கி, இந்தியச் சூழலில் தீவிரப் பயிற்சி பெறுகிறது. பாட்டிங், பௌலிங், காட்சிங் பிராக்டிஸ் – ஒரே சுறு சுறுப்பு மயம்!

இத்தனை அமர்க்களத்துக்கு நடுவில் ஆஸ்திரேலிய இளம் குழுவின் மானேஜர் ராபர்ட் மெரிமனைச் சந்திக்கிறோம்.

''ஆஸ்திரேலியாவில் இளம் கிரிக்கெட் பிரியர்களுக்குப் பயிற்சி அளிப்பது எப்படி?''

மெரிமன் ஒரு புன்முறுவலை நெளிய விட்டபடி, ''பன்னிரண்டு வயது, பதினான்கு வயது, பதினாறு வயது இளம் கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்கு ஏற்பப் பல போட்டிகள் உள்ளன. அவரவர்கள் தரத்துக்கேற்ப ஆட்டப் போட்டிகளில் பங்கேற்கிறார்கள். மத்திய சர்க்காரும், ராஜ்ய சர்க்கார்களும் அதிக அளவு நிதியை விளையாட்டுத் துறைக்கு ஒதுக்கியிருக்கிறார்கள். ஒவ்வொரு ராஜ்யத்திலும் விளையாட்டுத் துறைக்கென்று ஓர் அமைச்சர் பணி புரிகிறார். சட்டத்துக்குட்பட்டு நடக்கும் சூதாட்டப் பந்தயங்களிலிருந்து வரும் வருவாய் அப்படியே இந்த விளையாட்டுத் துறைப் பயிற்சிகளுக்கு ஒதுக்கப்படுகிறது. ஒவ்வொரு ராஜ்யத்திலும் விளையாட்டுத் துறைக்கென்று விசேஷமாக விளையாட்டுத் துறை இயக்குனரும் நியமிக்கப்பட்டுள்ளார். இந்த இயக்குநரின் பணி திறமையான பயிற்சியாளர்களை உருவாக்குவதுதான். கிரிக்கெட் கிளப்புகளின் உதவி கொண்டு இளம் ஆட்டக்காரர்களுக்கு கோச்'கள் கடுமையான பயிற்சி அளிக்கின்றனர்'' என்றார்.

''விருந்தினர்களுக்குத் தமிழகத்தில் உணவுப் பிரச்னை ஏதும் இல்லாதிருக்கிறதா? நல்லபடியாக உபசரிக்கிறார்களா?''

''ஹோட்டல் சோழாவில் நாங்கள் தரும் மெனு கார்டின்படி உணவு தயாரித்துத் தருகிறார்கள். எங்களுக்கு ஆஸ்திரேலியாவில் இருப்பது போன்ற நிறைவே ஏற்பட்டுள்ளது. எங்களுக்கு விருப்பமான பீஃப், முட்டை சிக்கன் உணவுகள் கிடைக்கின்றன. உங்கள் நாட்டு வாழைப் பழத்தின் மீது எங்கள் கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்குக் கொள்ளை ஆசை! ஆனால் சறுக்கி விழமாட்டோம்'' என்று அப்பழத்தில் ஊசி ஏற்றுவது மாதிரி சொல்லிவிட்டுப் பயிற்சிகளை மேற்பார்வையிட ஓடுகிறார் மெரிமன்.

ஆஸ்திரேலியப் பத்திரிகைப் பிரதிநிதி ஜான் கும்பரிடம் கேள்விகளைத் தொடுக்கிறேன். காப்டன் ஹூஸ் பற்றிய ரஸமான விஷயங்களைத் தருகிறார்.

''கேப்டன் ஹூஸ் நியூஸிலாந்து, இங்கிலாந்து, மேற்கிந்தியத் தீவு ஆகியவற்றுக்கு எதிராக ஆடியுள்ளார். உலகக் கோப்பைப் பந்தயத்தில் பங்கு கொண்டவர். இந்தியாவுக்கு வருவது இதுவே முதல் தடவை. ஆஸ்திரேலியாவில் உள்ள பெர்த் நகரில் கிம் ஹூஸ் விளையாட்டுத் துறை ஆசிரியர். இவரது மனைவியின் பெயர் ஜென்னி. குழந்தைகள் இல்லை.''

காப்டன் கிம் ஹூஸ் பயிற்சியிலிருந்து பெவிலியன் அறைக்குத் திரும்புகிறார். வியர்வை சொட்ட நிற்கும் காப்டன் ஹூஸைத் தடுத்தாட்கொள்கிறேன். முகம் கோணாமல் ஆஸ்திரேலியக் காப்டன் ரத்னச் சுருக்கமாக விடை தருகிறார்:

''நான் ஸ்கூல் கிரிக்கெட்டில் நன்கு ஆடி வந்தேன். பிறகு ஷெப்பீல்ட் ஷீல்ட் போட்டிகளில் கலந்து கொண்டேன். ஷெப்பீல்ட் ஷீல்ட் ஆட்டம் என்னை டெஸ்ட்டுக்கு ஆடுபவனாக உயர்த்தி விட்டது!''

''ஆஸ்திரேலியாவில் இளம் கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்குத் திரைப் படம் போட்டுக் காட்டுவதன் மூலம் பயிற்சி அளிப்பது உண்டா?''

''அது எங்களுக்குத் தேவையில்லை. தலை சிறந்த பழம்பெரும் ஆட்டக்காரர்களும்

# இளைஞர்






**டெஸ்ட் மாட்சுகள் ஆட பாரதம் வந்துள்ள ஆஸ்திரேலிய கிரிக்கெட் குழுவினர்**

| | | | |
|---|---|---|---|
| மானேஜர் ராபர்ட் மெரிமன் | காப்டன் கிம்பர்லி ஹூஸ் | பீட்டர் ரேமாண்ட் ஸ்லீப் | மால்கம் வுட் |
| ஆலன் பார்டர் | கிராய்மி போர்ட்டர் | ஆண்ட்ரு மார்க் ஹில்டிச் | ராட்னி மால்கம் ஹாக் |





# பட்டாளம்!



ஜியாப்ரே டைமாக்



தேவனெல் வாட்மோர்



ஜேம்ஸ் டோகுலட் ஹிக்ஸ்



கிரஹாம் எல்லாப்



ஆலன் ஹர்ஸ்ட்



வார்விக் டார்லிங்



புரூஸ் யார்ட்லி



கெவின் ஜான் ரைட்

படங்கள்: பாலாஜி

தேர்ந்த பயிற்சியாளர்களும் இளம் குருத்துக்களுக்குப் பயிற்சி தருவதற்கு வேண்டிய அளவில் இருக்கிறார்கள்!''

''சேப்பாக்கம் 'பிட்ச்' பற்றி உங்கள் கருத்து?''

''ஏ ஒன்! விரைவுப் பந்து வீச்சாளர்களுக்கு நன்கு உதவும் என்று எதிர்பார்க்கிறேன்!'' என்றார் காப்டன் கிம் ஹியூஸ். இதற்குள் கையெழுத்து வேட்டைக்காரர்கள் படையெடுக்கவே காப்டன் ஹியூஸ் ஆடை மாற்றச்செல்வது போல் விரைந்து நழுவுகிறார்.

மாலை நான்கு மணிக்கு மறுபடி பயிற்சி தொடங்குகிறது. ஞாயிற்றுக் கிழமையும் ஓய்வில்லை.

Physio Therapist அல்ட்ரா ஸானிக் மஸாஜ் இயந்திரத்தினை இயக்கி இளம் கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்குப் பந்து வீச்சின் விளைவாக ஏற்பட்ட கை உளைச்சலுக்குச் சிகிச்சை அளிக்கிறார்! ''இந்த Physio Therapist ஒரு வரப்பிரசாதம்'' என்கிறார் காப்டன் ஹியூஸ்.

பாக்கர் குழுவில் சேர்ந்த சிறந்த ஆட்டக்காரர்களுக்குத் தாங்கள் சளைத்தவர்களில்லை என்று நிரூபிக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் உள்ளார்கள் இளம் ஆஸ்திரேலியக் குழுவினர். முதல் டெஸ்ட்டுக்கு முகமன் கூறி அவர்களை வரவேற்போம்!

— குண்டுமணி

---

## ✳ ஒரு விடுகதை ஒரு தொடர்கதை — பட விமர்சனம்

காதலித்தது ஒருவனை மணந்ததோ வேறொருவனை. கணவனாக வாய்த்தவனோ, கட்டிய மனைவியைத் தொடாமல், ஆனால் அவள் கண் முன்னாலேயே - அவளைக் கொண்டே தன் காதலியுடன் எங்கேஜ்மெண்டுக்கு ஏற்பாடு செய்து கொண்டு அவள் அழகையும் அவள் தரும் இன்பத்தையும் இல்லாளிடமே புகழும் அயோக்கியனாக இருக்கிறான். என்றாவது கணவன் அன்பு தன் மீது திரும்பும் என்று பொறுமையாக இருக்கிறாளாம் உத்தியோகம் பார்க்கும் அந்தப் படித்த பெண். நம்ப முடியாத, நடக்கக்கூடாத பாத்திரப் படைப்பு. இது போகட்டும்.

இவள் காதலித்த இளைஞன் வேறொருத்திக்கு மாலையிடுகிறான். அவளிடம் தன் உயிரையே வைத்திருக்கிறான். ஆனால் அவளோ கணவனின் நண்பன் விளையாட்டு வீரன் ஒருவனுடன் தகாத உறவு கொள்ள, இதைக் கண்ணும் மெய்யுமாகக் கண்ட கணவன் தன் மனைவியையும் தன் நண்பனையும் ஒன்றுசேர்த்து வைத்துவிட்டு ஒதுங்கிக் கொள்கிறான். ஏனென்றால் அவன் பெயர் தியாகராஜன்!

ராம்-ரஹீம் என்று நல்ல பெயர் கொண்டவர்கள் இப்படி மோசமான கதை புனைய வேண்டாம்!

கமலாவாக ஷோபா ரொம்பவும் சிரமப்பட்டு நன்றாக நடித்துள்ளார். ஆனால் விழலுக்கு இறைத்த நீராகிவிட்டது.

தியாகராஜன் பாத்திரத்தை ஏற்றிருப்பவர் விஜயன். ஐயோ பாவம்! வளரும் கலைஞருக்கு இப்படி ஒரு காரெக்டரைக் கொடுத்துச் சதி செய்திருக்க வேண்டாம்.

படத்தில் பாதிக்கு மேல் சுருளி - சச்சு குலேலக் குடும்பத்தின் கொட்டம்தான் ஆக்கிரமிப்புச் செய்கிறது. வசனங்கள் சில இடங்களில் அழுத்தமாக விழுந்துள்ளன. இசை கங்கை அமரனும். ஹிட்டாகும்படி ஏதுமில்லை.

இயக்குனர் காஜாவின் துணிச்சல்(?) முகம் சுளிக்க வைக்கிறது. இம்மாதிரி விடுகதைகள் இனி தொடர வேண்டாம்.

-கௌசிகன்

Tug of war— கயிறு இழுக்கும் போட்டி. ராம்டன் க்ரீவஸ் பொழுதுபோக்குக் கழகம் அண்மையில் நடத்திய போட்டியில் ஒரு காட்சி இது! போட்டியில் பங்கேற்கும் ஒவ்வொருவருடைய உணர்ச்சியும் பொங்கி வழிவதோடு அவர்களுடைய முயற்சியும் திரண்டெழுவதைக் காணலாம். அவர்களை உற்சாகப் படுத்தும் அன்பர்களின் முக பாவங்களைப் பாருங்கள். உற்சாகமான கோஷங்கள், கூக்குரல்கள்கூடக் காதில் ஒலிப்பது போல் தோன்றவில்லை!

உத்ராவின் விளக்கம்:

''ஒரு குழுவின் உணர்ச்சிகள் முழுதும் பிரதிபலிக்கும் ஆக்ஷன் படம் எடுக்க வேண்டும் என்ற ஆசையில் Tug of war நடக்கும் இடத்துக்கு விரைந்தேன். ஒய். எம். ஸி. ஏ. உடற் பயிற்சிக் கல்லூரி மைதானத்தில் போட்டி ஆரம்பித்து நாலைந்து செகண்டுகளுக்குப் பிறகு உணர்ச்சி வெள்ளம் அலைமோதியது. அந்தக் கணத்தைப் பார்த்து 'கிளிக்' செய்தேன். கயிறு இழுக்கப்படும் அதே கோணத்திலிருந்து படம் எடுக்க வேண்டும். அதே நேரத்தில் காமிரா உயரத்திலும் இருக்க வேண்டும். அப்பொழுது தான் குழுவின் முழுத் தோற்றமும் பாவங்களும் படத்தில் விழும்.

படம்: உத்ரா

விளக்கம்: குண்டுமணி



அவர்கள் இருவரும் சந்தித்துக்கொண்ட போது ஸ்டேடியத்தில் கூட்டம் கலைந்து கொண்டிருந்தது.

நாகப்பன், எத்திராஜுலுவுக்கு வணக்கம் சொன்னான்.

''நீங்க நாகப்பன்தானே?'' அவர் சிறிது சந்தேகத்துடன் கேட்டார்.

அவன் தலையசைத்தான். தன் தோளில் சரிந்திருந்த பெரிய பிளாஸ்டிக் பையாலான பொரி மூட்டையைச் சரியாகப் போட்டுக் கொண்டான். இடது கை மணிக்கட்டில் சுற்றியிருந்த வேர்க்கடலைப் பையைச் சற்றுத் தளர்த்திக் கொண்டான்.

''முதலாளி... சௌக்கியமா இருக்கீங்களா? வீட்ல, அம்மா சௌக்கியமா? கொழந்தைங்க...அவுங்க எல்லாம் பெரியவங்க ஆயிருப்பாங்க...''

அவர்கள் பேசிக் கொண்டே ஸ்டேடியத்துக்கு வெளியே வந்தனர்.

டிரைவரைக் காரின் டிக்கியைத் திறந்து விடச் சொன்னார். பிறகு நாகப்பனின் மூட்டைகளை அதில் வைக்கச் சொன்னார். பின் சீட்டில் இருவரும் சமமாக உட்கார்ந்ததும் அந்த பென்ஸ் கார் வேகமெடுத்தது.

நாகப்பனுக்கு உடலும் மனமும் ஒடுங்கி விட்டன.

அது ஒரு காலம்.

எத்திராஜுலுவின் தொழிற்சாலை காரின் முக்கிய உதிரிப் பாகங்களைத் தயாரித்து முன்னேறிக் கொண்டிருந்த கட்டம் அது.

எத்திராஜுலுவின் கண்ணோட்டம் தெளிவாக இருந்ததால் அவர் தொழிலாளர்களின் நலனில் முக்கிய கவனம் செலுத்தினார். அவர்கள் வசதியுடன் நிம்மதியாக இருந்தால்தான் தொழில் வளரும் என்ற உண்மையை உணர்ந்தார்.

குறைந்த பட்சச் சம்பளம் ஐந்நூறு ரூபாய் என்று ஆக்கினார். தொழிற்சாலை கான்டீனில் மிகக் குறைந்த கட்டணத்தில் உணவு, நிறைய லீவு வசதிகள், ஓவர்டைம், தொழிற்சாலைக்கு வரவும் திரும்பிப் போகவும் இலவச பஸ் வசதி போன்றவைகளை எந்த விதமான லாப நோக்கமும் இல்லாமல் செயல்படுத்தினார்.

அபாரமான முன்னேற்றத்துடன் வெளிநாடுகளுக்கு லட்சக் கணக்கான ரூபாய் மதிப்புள்ள ஆர்டர்களுடன் ஏற்றுமதி செய்யக் கூடிய சுறுசுறுப்புடன் இயங்கிக் கொண்டிருந்த போதுதான் அங்கே நாகப்பன் தன் யூனியனின்



இளையை, தன் தலைவர்களின் ஆசியுடன் தொடங்கினுன்.

ஆட்சியின் துணையும், அவனுடைய வாக்கு வன்மையும், முதலாளிகளுக்கு எதிராகத் தொடங்கிய தூஷணைகளும் தொழிலாளர் களின் மத்தியில் அவனுக்கு நிறைய ஆதர வைத் தேடித் தந்தன.

எந்த விதத்திலும் நாகப்பனின் யூனியன், தொழிற்சாலை விவகாரங்களில் குறுக்கிட முடியாதவாறு எல்லா வசதிகளும் நிரம்பி, தொழிற்சாலை பிரச்னையே அற்று முன் னேறியது.

இது அவனுக்கும், அவன் சார்ந்த கட்சிக் கும் மிகப் பெரிய ஏமாற்றத்தையும், ஏன் சங்கடத்தையும் தந்தது. ஒரு சந்து கிடைத் தாலும், அவரை மடக்கி, சில நிதி வசதி களைப் பெற்றுக் கொள்ளலாம் என்று எதிர் பார்த்ததுக்கு இடம் இல்லாமல் போய் விட்டது.

இருந்தும் அப்படி ஒரு கட்டம் வரத்தான் செய்தது. நாகப்பனின் கட்சி, மாநில மாநாடு நடத்தியபோது, நாகப்பனின் கட்சியின் பொருளாளரும் கட்சிக்கு நன்கொடையாக ஐந்து லட்சம் ரூபாய் கேட்டார்கள்.

எத்திராஜுலு இந்த வேண்டுகோளையும், கேட்ட நபர்களையும் ஓர் அசிங்கமான பிராணி யைப் பார்ப்பது போலப் பார்த்து உணர்ந் தார். அவரின் அறிவுக்கும் நோக்கத்துக்கும் இது சற்றும் சம்மதமில்லாத விஷயமாகத் தோன்றியது.

''முடியாது'' என்ற ஒரே வார்த்தையால் மறுத்து விட்டார்.

''உங்களுக்கு என்ன சார்? உங்க சொந்த பணத்தையா கேட்கறோம்? கம்பெனி பணத்தி லிருந்துதானே கேட்கிறோம்'' என்று ஒரு கட்டத்தில் அவர்கள் கேட்டதும், அவருக்குக் கோபம் கண்மண் தெரியாமல் வந்து விட்டது.

''ராஸ்கல்ஸ்! கம்பெனிப் பணம் என் பணத்தைவிட உயர்ந்த பணம். பொறுப் புள்ள பணம். பலருடைய உழைப்பும் ரத்த மும் வேர்வையும் அறிவும் திறமையும் கலந்த பணம். கொடுக்க எனக்கு அதிகாரமும் இல்லை. பைத்தியம் இல்லை...''

''வார்த்தைகளை அளந்து பேசுங்கள். நாங்கள் நினைத்தால் பாக்டரியையே மூடச் செய்து விடுவோம்...''

''ஷட் அப் ஐ ஸே, இந்த மிரட்டலுக்கு எல்லாம் நான் பயப்படாதவன். இனி ஏதாவது பேசினுல் ஐ வில் பயர் யு. நான் எதற்கும் தயாராகி விட்டேன்.''

சில வினுடிகளில் அவர்கள் போய் விட் டார்கள்.

இந்த விஷயம் கட்சியின் மேலிடத்திற்கு உடனே எட்டியது. ஆத்திரம் அடைந்தார்கள். அவருக்கு நல்ல மதிப்பும் செல்வாக்கும் பண பலமும் இருந்ததனுல் உடனே ஒன்றும் செய்ய முடியவில்லை.

அது தீபாவளி சமயமாதலால் போனஸ் பிரச்னை அவர்களுக்குக் கை கொடுத்தது.

நிர்வாகம் முப்பது சதவிகித போனஸை அறிவித்தது. அது மிகக் குறைந்த விகிதம் என்றும், ஐம்பது விகிதமாவது தர வேண்டும் என்று நாகப்பனின் யூனியன் வற்புறுத்தியது. உடம்பாடு காண முடியவில்லை.

யூனியன் நிர்வாகிகள் தனிமையில் எத்தி ராஜுலுவை அழைத்து ஐந்து லட்சம் ரூபாய் கொடுத்தால் முப்பது சதவிகிதத்திற்கே இணங்கி ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போடுவதாகச் சொன்னுர்கள்.

அவருக்கு இவர்களின் அற்பத்தனம்தான் மனத்தில் கருக்கொளப்பட்டது.

''அதை உங்களுக்குத் தருவதைக் காட்டி லும் என் தொழிலாளர்களுக்குக் கொடுத்து விட்டுப் போவேன்'' என்று முகத்தில் அடித் தாற்போலச் சொல்லிவிட்டு வெளியேறினுர்.

அந்த மாத இறுதியில் சில வெளிநாடு களுக்கு ஏற்றுமதி செய்ய வேண்டிய, சுமார் இரண்டு கோடி ரூபாய் மதிப்புள்ள உதிரிப்



பாகங்கள் டெஸ்பாட்ச் செய்வதற்குத் தயாராக இருந்தன. வாரிகளில் ஏற்றி, சென்னை துறைமுகத்துக்குக் கொண்டு செல்ல இறுதி ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. அந்த ஆர்டர் குறித்த காலத்தில் போய்ச் சேர்ந்து விட்டால், அடுத்த வருடம் போனஸாக ஐம்பது சதவிகிதம் கொடுத்து விடலாம் என்று எத்திராஜுலு முடிவு செய்திருந்தார்.

ஆனால், லோடிங் செய்வதற்காக வாரிகள் வந்தபோது சரக்கை ஏற்ற விடாமல் யூனியன் தடுத்து விட்டது.

ஐம்பது சதவிகித போனஸை உறுதிப்படுத்தினால்தான், லோடிங் செய்ய அனுமதிப்போம் என்று வாரிகளின் முன்னே தொழிலாளர்கள் படுத்துக் கொண்டார்கள்.

''நாகப்பன், உங்க சொந்த விஷயத்துக்காகத் தொழிலாளர்களையும் கம்பெனியையும் மோசமான பாதைக்கு இழுத்து விடாதிங்க. உங்க கையைக் கால்னு நெனச்சுக்கறேன். மனசு வையுங்க...'' என்று நாகப்பனின் கைகளைப் பிடித்தார் எத்திராஜுலு.

நாகப்பன் சட்டென்று உதறிவிட்டான்.

''இந்த மாய்மாலமெல்லாம் வேண்டாமய்யா. அம்பதுக்கு ஒத்துக்கறேன்னுசொல்லி ஒரு அக்ரிமெண்டு எழுதிக் கொடு. அந்த செகண்டே வாரிகளில் லோட் பண்ணச் சொல்றேன்...'' என்று மரியாதையிலிருந்து விலகி ரொம்ப மதர்ப்பாகச் சொன்னான்.

''அவ்வளவுக்கு, பணத்துக்கு எங்கே போறது நாகப்பன்?'' என்று எத்திராஜுலு கேட்டதும், பளிச்சென்று நாகப்பன்,

''உனது பொண்டாட்டியை வித்துக்குடு. இல்லேன்னா அவளை.....'' கேட்கக் கூடாத பேசக் கூடாத முறையில் எக்காளமாகச் சொல்லச் சொல்ல எத்திராஜுலு அந்த வார்த்தைகளின் கனத்தைத் தாங்க மாட்டாது, மின்னல் போல அவன் மேல் பாய்ந்து கண் மூடித்தனமாக அவனைக் குதறி எடுத்து விட்டார்.

''யு ராஸ்கல். யாரு கிட்ட எதைப் பேசறேன்னு தெரியாமப் பேசிட்டே. பொறுக்கி நாயே, இத்தனை கஷ்டப்பட்டு இந்த லேபரர்களுக்கு வெளக்கு ஏத்தி வெச்சதுக்கு இந்தக் கேள்வியாடா கேக்கறே. போடா. பாக்டரியாச்சு, மண்ணுமாச்சு. லாக் அவுட் பண்றேன்'' என்று கோபாக்னியாய் உறுமிவிட்டு, மற்ற டைரக்டர்களுடன் உள்ளே போய், போனில் நகரத்தில் இருந்த டி.ஐ.ஜி. ஆப் போலீஸைக் கூப்பிட்டு நிலைமையைச் சொல்லி, வரச் சொன்னார்.

அரசுத் தலைமைச் செயலாளருடன் தொடர்பு கொண்டு முடிவைச் சொல்லி விட்டார். லோடிங் செய்ய வந்த வாரிகளைத் திருப்பி அனுப்பச் செய்தார்.

அன்றையிலிருந்து மூன்று வருடங்கள கம்பெனி லாக்-அவுட்டில் இருந்தது. அடுத்து வந்த தேர்தலில் வெற்றி பெற்ற இன்னொரு கட்சி, மாநிலத்தின் அரசுப் பொறுப்பு ஏற்றுக் கொண்ட பின் அவருக்கு நியாயமான நஷ்டஈட்டைக் கொடுத்து விட்டுக் கம்பெனியை ஏற்றுக் கொண்டது.

அந்த மூன்று வருடக் காலத்தில், வேலை இழந்த தொழிலாளர்கள் மிகவும் கஷ்டத்துக்கு உள்ளாயினர். சிலர் பிச்சைகூட எடுத்தனர்.

பென்ஸ் கார், எத்திராஜுலுவின் பங்களாவின் 'கேட்'டில் கூர்க்காவின் சல்யூட்டை வாங்கிக் கொண்டு, 'கேட்'டிலிருந்து ஒரு பர்லாங் தூரம் உள்ளே போய் போர்டிகோவில் நின்றது.

டிரைவர் காரின் கதவைத் திறந்து விட்டார்.

''நாகப்பன்! உள்ளே வாங்க...'' என்று எத்திராஜுலு அழைத்தார்.

புழுதி படிந்த தன் கால்களால், பங்களாவின் கண்ணாடித் தரை கெட்டுப் போகுமே என்ற கூச்சத்தில் பாதங்களை அழுத்தமாக வைக்காமல் அவரைத் தொடர்ந்து சில அறைகளைக் கடந்து ஒரு பெரிய அறையில் நுழைந்தான்.

சில நிமிடங்களில் டிபனும் காப்பியும் வந்தன.

அவர் சாப்பிடச் சொன்னார்.

''நாகப்பன்,! கம்பெனியை லாக் அவுட் செய்ததுக்குப் பின்னால, உங்களைக் கட்சியிலிருந்தும் யூனியன்லேர்ந்தும் விலக்கிட்டாங்களாம்...?''

''ஆமாங்க மொதலாளி. நா உங்களை அந்த வார்த்தை கேட்டது எல்லோருக்கும் அதிர்ச்சியாய்ப் போச்சுங்க. சட்ட சபையிலேயும் பத்திரிகையிலேயும் பெரிய பிரச்னையா உருவெடுத்துப் போச்சு. என்னை டிஸ்மிஸ் பண்ணிட்டாங்க. அந்த செகண்டுல என்னையும் மீறிப் பேசிட்டேனே ஒழிய, நீங்க அடிக்க வந்தவுடனே அதோட அர்த்தமும் கனமும் புரிஞ்சு, அய்யோ இப்படிச் சொல்லிட்டேனென்னு நீங்க அடிச்ச அத்தனை அடியையும் வாங்கிட்டேன். எதிர்த்து ஒரு பேச்சுக்கூடப் பேசலே. என்னாலதான் பாக்டரி லாக் அவுட்டாச்சுன்னு தொழிலாளர்கள் மத்தியிலே என்னைப் பத்தி எண்ணம் உருவாயிப்போச்சுங்க. வெளியே தலை நீட்டவும் முடியலீங்க.



மேற்கு இந்தியக் கடல்களில் வாழும் ஒரு வகை மீன் தன்னைப் போன்று மூன்று மடங்கு பெரிய மீனைத் தனக்கு உணவாக விழுங்கி விடுகிறது.

✱



சாதாரணத் தோட்டத்து நத்தையின் நாக்கில் 135 வரிசைகளாக 14,175 நுண்ணிய பற்கள் உள்ளன.

அ. இராமச்சந்திரன்

கொஞ்ச நாள்லே எல்லோருமே என்னை மறந்துட்டாங்க. ஒரு வேலைன்னு சொல்லிக்கிற அளவுக்கு எனக்கு எந்த வேலையும் தெரியாதுங்க மொதலாளி. அப்புறம் பொரி விக்கறதுதான் கடைசிலே அமைஞ்சது.''

''நாகப்பன். அப்ப எனக்குக் கூட கோபம் அடிக்கடி வந்திட்டிருந்தது. நான் ரொம்பப் பொறுமையா இருந்திருக்கணும். நீங்க எந்த வார்த்தை என்னைச் சொன்னாலும், அதுக்காகக் கோபப்பட்டு வெறுப்பு வந்து லாக் அவுட் செஞ்சது தப்பு. எத்தனை பேர் சாப்பாட்டுக்குக் கஷ்டப் பட்டாங்கன்னு பின்னாலே தான் தெரிஞ்சது. நம்ம பாக்டரி பேரைச் சொல்லி. அதுல வேலை இழந்த தொழிலாளின்னு சொல்லிச் சிலரு பிச்சை கூட எடுத்துட்டாங்கன்னு கேள்விப் பட்டதும் எனக்கு உசிரு போறாப்பல வந்துடுச்சு. வெளி நாட்டுல இருக்கற தொழிலாளிங்க மாதிரியும் யூனியன் மாதிரியும்தான் இங்கே இருப்பாங்கன்னு நெனைச்சுட்டேன். ஆனா நம்ம நாட்டுல இன்னும் அவ்வளவு மனப் பக்குவம் வளரலே. கொஞ்ச காலமாகும். அதுக்குத் தகுந்தாப்ல தானே நானும் இருக்கணும் என்னை மன்னிச்சிடுங்க நாகப்பன். நாம எல்லாரும் அனுபவக் குறைவாலும் உணர்ச்சி வசப்பட்டதாலும் ஒரு பெரிய தப்புக்குக் காரணமாயிட்டோம்.''

எத்திராஜுலு உணர்ச்சி வசப்பட்டுக் குரல் தழைந்து பேசினார். அந்தச் சமயத்தில் எத்திராஜுலுவின் மனைவி உள்ளே வந்தார். அவர் மனைவியை நாகப்பன் இதுவரை பார்த்ததில்லை. ஆனால் மிகவும் அழகானவர் என்றும், ஆந்திராவில் பெரிய ஜமீன் குடும்பத்தைச் சார்ந்தவர் என்றும், அவருடைய அப்பா ஐ.சி.எஸ். அதிகாரி என்றும் கேள்விப்பட்டிருந்தான்.

அந்தக் கம்பீரமும் பெருந்தன்மையும் துலங்கிய முகத்தைப் பார்த்ததும் நாகப்பனுக்கு இதயம் வலித்தது. இந்தப் பெண்ணைக் குறித்தா அந்த வார்த்தைகள் பேசினோம், என்று வேதனைப்பட்டுத் தலைகுனிந்தான்.

''சந்திரகாந்தி! நம்ம பாக்டரில யூனியன் தலைவராய் இருந்தவர்'' என்று மட்டும் சொல்லி அறிமுகப்படுத்தி, அவனுடைய இன்றைய தாழ்வுக்குத்தாம் காரணமாகி விட்டோமே என்று வருத்தப்பட்டுக் கொண்டார்.

சந்திரகாந்தி, நாகப்பனையும், அவன் குழந்தைகளைப் பற்றியும் விசாரித்தார். தெலுங்கு சாயலோடு தமிழ் பேசினாலும், அவருடைய குரல் இதமாகத் தன்மையாக, மனத்தை ஒரு முகப்படுத்துவதாய் இருந்தது.

''நமக்கு வால்பாறைல எஸ்டேட் இருக்குது. அங்கே நம்பிக்கையான ஆள் ஒருத்தர் வேணும். பழைய ஆள் ரெண்டு மாசத்துக்கு முன்னாலேதான் ரிடையராயிட்டார். நீங்க போய் இருங்க. நாகப்பன், நல்ல சம்பளம், வசதி எல்லாம் தர்றோம்'' என்று சொன்ன சந்திரகாந்தி தன் கணவரிடம், ''நாகப்பனுக்கு இந்த வேலை தர்லாமில்லே?'' என்று கேட்டாள்.



## சிவப்பு, பச்சை, ஆரஞ்சு!

அம்பத்தூர் தொழில் பேட்டையில் பத்து ஏக்கர் நிலப்பரப்பில் விஸ்தாரமாக அமைந்துள்ளது நவீன குறள் இன்ஜினியரிங் தொழிலகம். இங்கு நூற்பு, நெசவு ஆலைகளுக்குத் தேவைப்படும் நூற்புக்கதிர் தயாரிக்கிறார்கள்.

அலுமினியக் கோல்கள் நவீன இயந்திரங்களில் நுழைந்து கண் இமைக்கும் நேரத்தில் நூற்புக் கதிருக்கான அளவில் வெட்டப்பட்டு, துளையிடப்பட்டு, வரையிடப்பட்டு முப்பது செகண்டில் வந்து விழுகின்றன. பார்க்கத் திகைப்பாகவும் வேடிக்கையாகவும் இருக்கிறதென்றால் இவை சோதனைக்கு உள்ளாவதைக் காண இன்னும் பிரமிப்பாய் இருக்கிறது.

பச்சை, ஆரஞ்சு, சிவப்பு விளக்குகள் 'டிராபிக்'-போக்குவரத்தை ஒழுங்கு படுத்துவது போல், இந்த நூற்புக் கதிர் தயாரிப்பு ஆலையிலுள்ள ஆய்வுக் கருவியில் ஒவ்வொரு நூற்புக்கதிரும் பச்சை, ஆரஞ்சு, சிவப்பு விளக்குப் பரிசோதனைக்கு உள்ளாகிறது! பச்சை விளக்கு எரிந்து விட்டால் அந்த நூற்புக்கதிர் உடனே 'பாக்' செய்யுமிடத்துக்குப் பயணமாகிறது! ஆரஞ்சு விளக்கு எரிந்தால் அந்த நூற்புக்கதிர் மீண்டும் செப்பனிடத் தொழிலகத்துக்கே திரும்புகிறது! சிவப்பு விளக்கு எரிந்து விட்டால் சிறிதும் தாட்சண்யமின்றிப் புறக்கணிக்கப்பட்டு ஒதுங்கிக் கொள்கிறது! எல்லாம் தானியங்கு முறையில்! புறக்கணிப்பு பத்தாயிரத்தில் ஒன்றுக்குத் தான் ஏற்படலாமாம்.

— பி. எஸ். எம்.

''நானும்தான் அதை நெனைச்சேன்.'' என்றவர், ''நாகப்பன், அங்க போறீங்களா?'' என்று கேட்டார்.

''போறேனுங்க...'' என்று நாகப்பன் ரொம்ப சந்தோஷப்பட்டுச் சொன்னான்.

சிறிது நேரத்தில் நாகப்பன் நன்றி ததும்ப மகிழ்ச்சி பொங்க, தன் குற்ற உணர்வெல்லாம் கரைந்திருக்க விடைபெற்றுக் கொண்டான்.

அதே பென்ஸ் காரில் அவனை வீட்டில் விட்டு வரச் சொன்னார் எத்திராஜுலு.

வீட்டின் முன் இறங்கும் போது, நாகப்பனாக இல்லாமல், எத்திராஜுலுவின் ஒரு பிரதிபலிப்பாக, அவர் பார்வையின் விரிவு உடையவனாக, அவருடைய பெருந்தன்மையின் ஆளுகைக்கு உட்பட்டவனாகத் தானும், அதே பெருந்தன்மை கைவரப் பெற்றவனாக மாறி இருந்தான்.



# சுருதி விலகிய ராகங்கள்

விமலா ரமணி

அவனுக்கு எல்லாமே பிரமிப்பாக இருந்தது.

அந்த இடம், அந்த அனுபவம், அந்த மிதப்பு, அந்தக் கனவுகள்... எல்லாமே எல்லாமே!

இப்படியும் ஒரு சொர்க்கபுரி உண்டா? இப்படியும் சில விசித்திர அனுபவங்கள் உண்டா? இப்படியும்...

அவன் மேன்மேலும் பிரமிப்புடன் அந்தப் பிரும்மாண்டமான ஸ்டுடியோவின் ஒவ்வொரு 'ப்ளோராகப்' பவனி வந்து கொண்டிருந்தான்.

இந்த 'செட்'களில் அவனும் நடிக்கப் போகிறான்! ஆச்சரியம்.

அவனுடைய நீண்ட நாளையக் கனவு பலிக்கப்போகிறது! விந்தைதான்!

வெளியூரில் ஆடிக்கொரு தடவை அமாவாசைக்கொரு தடவை நாடகம் போட்டுக் கொண்டிருந்தவன், இன்று சென்னைப் பட்டினத்தில், அதுவும் சினிமாவில் நடிக்க வந்திருக்கிறான்!

எப்படி நடந்தது இந்த அதிசயம்?

'எக்ஸிபிஷ'னில் நடத்தப்பட்ட அவன் நாடகத்துக்கு ஓர் எம். எல். ஏ. தலைமை தாங்க நேர்ந்தது. நாடகம் அவருக்குப் பிடித்ததால் கடைசி வரை இருந்து நாடகத்தைப் பார்த்துப் பாராட்டி விட்டு அதில் கிராமத்தானாக நடித்த அவனிடம் தம்மை வந்து சென்னையில் பார்க்கச்சொல்லிப் போனார்.

அவனுக்கு அதிர்ஷ்டம் அடித்தது!

அந்த எம். எல். ஏ.யின் நண்பர் திரைப் படம் ஒன்று எடுக்கிறார். எனவே அவனுக்கு இரண்டாவது கதாநாயகன் வேடம் கிடைத்து விட்டது.

எம். எல். ஏ. சிபாரிசு அல்லவா? அங்கே வரும் அவனிடம் 'அண்ணே' என்று அன்பாகப் பழகினார்கள்.

நாடகங்களில் பல வேடங்கள் போட்டிருக்கிறான். 'மேக் அப்' போட்டிருக்கிறான். ஆனால் சினிமாவுக்கு அவன் புதுசு! முதல் அனுபவமும் கூட.

அவனுக்கு எல்லாமே பிரமிப்பாக இருந்தது.

'சர் சர்' என்று பெரிய பெரிய ஏர்கண்டிஷன் கார்களில் வந்து இறங்கும் 'ஆர்ட்டிஸ்ட்கள்'. அவரவர்களுக்கு என்று தனித் தனி 'மேக் அப்' அறை வசதிகள்!

அவர்களின் பின்னே பல கூட்டங்கள்? அங்கங்கே 'கிசுகிசு'க்காக அலையும் நிருபர்கள் — அவர்களைப் பற்றி சினிமா வட்டாரத்தில் கிசுகிசுப்புக்கள்! எல்லாமே அவனுக்குச் சுவாரஸ்யமாக இருந்தன.

பார்த்துப் பார்த்துப் பிரமித்து அவனுக்கு அலுத்து விட்டது.

ஒரு 'டேக்' முடிந்து அடுத்த 'டேக்'கின் இடைவெளியில் அவன் 'ப்ளோரை' விட்டு வெளியே வந்து காற்றோட்டமாக நின்று கொண்டிருந்தபோதுதான் அவர்களைப் பார்த்தான்.

கூட்டம் கூட்டமாக வானில், மேக் அப் முகங்களுடன்... ஆண்களும் பெண்களுமாக யார் இவர்கள்?

ஓ! ஜூனியர் ஆர்டிஸ்டுகளாம்! ஒரு ரஜினியாக, கமலாக, கணேசனாக அல்லது ஒரு ஜெயலலிதாவாக, ஒரு ஸ்ரீதேவியாக மாறக் கனவு கண்டு, அப்படி ஆக முடியாமல் காலை ஏழுமணி முதல் மேக் அப் போட்ட முகங்களுடன் காத்திருக்கும் ஆர்ட்டிஸ்ட்கள்!

இவர்களுக்கும் இன்று ஷூட்டிங்கோ?

அடுத்த 'ஷாட்' ரெடியென்று புரடக்ஷன் மானேஜர் சொன்னபோது அவன் ப்ளோருக்குக் கிளம்பியபோது தான்...

அவளைப் பார்த்தான்....?

இவளா? இங்கா? இந்தக் கூட்டத்திலா? 'வானின் ஒரு புறமாக 'மேக் அப்' முகங்களோடு காத்திருக்கும் பல உப நடிகைகளில் அவளும் ஒருத்தியாக!

அவளுடன் இணைந்து அவன் எத்தனை நாடகங்கள் நடத்தியிருக்கிறான்! மேடையில் அவள் நடிப்பைக் கண்டு அசந்திருக்கிறான். குடும்பப் பெண்ணாக, விதவையாக, கண்ணகியாக, மாதவியாக....

ஓ! எத்தனை வேடங்கள் போட்டவள் இவள்! இவன் நாடகம் போடும் போதெல்லாம் இவள்தான் கதாநாயகி.

அந்த ஊர் நாடகக் குழுக்கள் அத்தனைக்கும் அவள்தான் கதாநாயகி!

ஒரே சமயத்தில் ஏழெட்டு நாடகங்களை ஒப்புக்கொண்டு பிசிறில்லாமல் அற்புதமாக நடிப்பாள். வெறும் நடிகை மட்டுமல்லாமல்

அதை மீறிய சில இலக்கிய உணர்வுகள் அவளுள் மிதப்பதை அவன் அறிந்திருந்தான்.

இலக்கியப் பத்திரிகைகளைப் பற்றி விமரிசிப்பாள். வீதி ஒர நாடகங்களைப் பற்றியும், புதுக்கவிதைகளைப் பற்றியும் தர்க்கம் செய்வாள். சொல்லுகிற வசனங்களைப் பணத்துக்காக மட்டும் சொல்லாமல் உணர்ந்தும் சொல்வாள். சில இலக்கிய நாடகங்களில் பணம் வாங்காமல் கூட நடித்திருக்கிறாள்.

''நான் மட்டும் ஓர் ஆண்பிள்ளையாக இருந்தா இப்படி உங்க கூடப் பேசிக்கிட்டே இருக்கறதுக்காக மட்டுமே உங்க கூடச் சுத்துவேன். ஆனா நான் பொம்பளையாப் பொறந்துட்டேன். நீங்க ஆம்பிள்ளை. வயத்துப் பொழைப்புக்கு நான் தேர்ந்தெடுத்த இந்தத் தொழில் என் இதயப் பசியைத் தணிக்காது! போயிட்டு வரேன். அடுத்த நாடகத்திலே சந்திச்சா நிறையப் பேசுவோம்'' என்பாள்.

நாடகங்களில் சந்திக்கும்போது மட்டுமே பேசிக்கொள்வார்கள்.

சில நாட்களுக்கு அவனுக்குத் தோன்றும்.. அவள் வீட்டுக்குப் போய் அவளுடன் பேசினால்தான் என்ன?

''எங்க வீட்டுக்கு உங்களைக் கூப்பிடணும்னுதான் ஆசை. வேண்டாங்க...நீங்க தள்ளியே இருங்க. அப்பத்தான் நாம் இலக்கிய நண்பர்களாக இருக்க முடியும்! அப்படித்தான் நான் இருக்கவும் விரும்பறேன்.''

அவளை நினைத்து நினைத்து அவன் மனத்துள் வியந்து நிற்பான். தன்னையுமறியாமல் அவள் மீது ஒரு 'ஹீரோ ஒர்ஷிப்!'

அதன் பிறகு?

அவள் நாடகங்களுக்கு ஒரு பணக்கார 'சில்க் ஷர்ட்' செட்டியார் தவறாமல் வந்து கொண்டிருந்தார். அவர் வருகிறார் என்பதை அவர் போட்டிருந்த 'மூன் டிராப்ஸ்' சென்டே சொல்லும். அப்புறம் அவளை 'க்ரீன்' ரூமில் வந்து பாராட்டினார். அப்புறம் அவளை அவர் தம் காரில் சில நாடகங்களுக்கு 'டிராப்' செய்துவிட்டுப் போனார். பிறகு அவளை வைத்து அவர் சினிமாப் படம் எடுக்கப்போவதாகக் கேள்விப்பட்டான். மனத்துள் அவள் முன்னேற்றத்துக்காக அவன் மகிழ்ந்தாலும் தன்னையுமறியாமல் ஒரு சோகம் படர்வதை அவன் உணரத்தான் செய்தான். அதன் பிறகு....?

அவனும் நாடகம் போடவில்லை. அவளைத் தேடிப் போகவும் இல்லை.

அவள் கதை என்னவாயிற்று என்பது அவனுக்கும் தெரிந்திருக்கவில்லை.

இன்று.... இந்தச் சூழ்நிலையில் அவளா? இந்தக் கூட்டத்தில் தனக்கென்று தனித்தன்மை இல்லாமல் அவளால் எப்படி இணைய முடிகிறது? இந்தக் காத்திருப்புக்களில் எப்படி அவளால் கலக்கமில்லாமல் கலக்க முடிகிறது?

செட்டியார் என்ன ஆனார்? அவனுக்குக் கேட்க வேண்டும் போல் தோன்றியது.

''வர்றீங்களா அண்ணே? 'செட்' காத்திருக்கு.'' — வந்தவர் அவசரப்படுத்தினார்.

அவனுக்காக 'செட்' காத்திருக்கிறது.

இங்கோ...? அவள் காத்திருக்கிறாள்.

இன்னொரு நாள் கேட்க வேண்டும்.

அவன் பரபரப்புடன் 'ப்ளோரில்' நுழைந்தான்.

அதன் பிறகு....?

இரண்டு மூன்று தடவை அங்கு வந்தபோது அவளைக் காணவில்லை. ஒருவேளை சந்தர்ப்



பம் கிடைத்திருக்காது. அவனுக்கு ஏக்கமாக இருந்தது.

அன்று-

அவளை அவன் தற்செயலாகத் தன் செட்டிலேயே சந்தித்து விட்டான். சினிமாப்படி அவன் ஒரு பட்டிக்காட்டு ரயில் பயணி.

ரயிலில் கூட்டமாக அமர்ந்திருக்கும் பல பேர்களுடன் 'அவளும்' அமர்ந்திருந்தாள். அவளுக்கு ஒரு 'க்ளோஸப் ஷாட்' கிடையாது. ஒரு வசனம் கிடையாது.

அந்த இருபத்தி ஐந்து ரூபாயும் கமிஷன் போக மிஞ்சும் பணமும் விட்டின் நினைவுகளும் துல்லியமாய் அவன் விழிகளில் பளிச்சிட்டன.

''இந்தா... தள்ளி உட்காரு தாயி''— என்று அவன் வசனம் பேச வேண்டும். வசனம் தொண்டைக்குள் சிக்கிக் கொண்டது. அவளை அங்கு அந்தச் செட்டில் அவ்வளவு நெருக்கமாகப் பார்த்தது அவனுக்கு வருத்தமாக இருந்தது.

அவனைப் பார்த்து அறிந்து கொண்ட பாவனையில் அவள் மெலிதாகச் சிரித்ததுடன் சரி. வலியப் பேச வரவில்லை.

பழைய 'அவளா' இவள்?

அந்த இலக்கிய ஈடுபாடும், விழிப்பின் உணர்வுகளும் இவளுள் ஒடுங்கி விட்டனவா? ஏதோ ஒரு பொம்மை மாதிரி அவள் ஏன் இப்படி ஜடமாகி விட்டாள்?

அவன் எப்படியோ ஒரு வழியாகத் தன் காட்சிகளை முடித்துவிட்டு 'மேக் அப்' களைந்துவிட்டு வெளியே வந்தபோது அவளைக் காணவில்லை. அவன் விசாரித்தான்.

அடுத்த ப்ளோரில்' ஏதோ அவசரமாக அழைத்தார்களாம். போயிருக்கிறாளாம்.

அவன் காத்திருந்தான். இந்தக் காத்திருப்பு அவனுக்குச் சாதகமாக இருந்தது. பழைய நினைவுகளை அசை போட்டபடி காத்திருந்தான்.

அதோ அவள் வந்து விட்டாள்! 'மேக் அப்' கலைக்காமல் அதே டிரஸ்ஸுடன்தான் வந்துகொண்டிருந்தாள். அவன் 'வணக்கம்' சொன்னான். அவளும் சிரித்தபடி வணக்கம் சொன்னாள்.



# ஈ.வே.ரா மன்னிப்பாராக!

தமிழ் நாட்டில் 56 ஆயிரம் ஆலயங்கள் உள்ளன. இவற்றில் வருட வருமானம் ஐந்து லட்சத்துக்கு மேல் வரும் ஆலயங்கள் 16 தான்!

மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் சாமி தரிசனத்துக்கு வரும் பக்தர்களின் செருப்பைப் பாதுகாக்கும் குத்தகை கடந்த ஆண்டு ஒரு லட்சத்து 70 ஆயிரம் ரூபாய்க்குப் போயிருக்கிறது! -அமைச்சர் ஆர்.எம். வீரப்பன்

தகவல்: செங்கோட்டை லெ. தங்கவேலு

''பெஸ்ட் ஆப் லக். எடுத்தவுடனேயே செகண்ட் ஹீரோ ரோலில் அறிமுகமாகியிருக்கீங்க. நல்ல ஆரம்பம். முயன்று முன்னேறுங்க....'' — அவள் எவ்விதக் கலப்படமுமின்றி வாழ்த்தினாள்.

''நான் முன்னேறுகிறது இருக்கட்டும். உன் கதை என்னவாச்சு?'' — அவன் சலிப்புக் கலந்த பரபரப்புடன் கேட்டான்.

அவள் பதற்றப்படாமல் சிரித்தாள். ''அதான்....பார்த்துட்டு இருக்கீங்க இல்லே? கதை முடிஞ்சு போச்சு. நாடகத்திலே ஆரம்பிச்சுச் சினிமாவிலே முடிஞ்சு போச்சு!''

''நீ ஏதோ சினிமாவிலே சேர்ந்து பெரிய கதாநாயகி ஆகப் போறேன்னு நான் கனவு கண்டுக்கிட்டு இருந்தேன். இங்கே இப்படி..?''

அவள் சிரித்தாள். ''ஏன்? நான் நல்லாத் தானே இருக்கேன்...''

''உனக்குத் தெரியாதது இல்லே...இந்த நிலையற்ற நிலை... அன்றைக்கு அன்றாடம் காய்ச்சி மாதிரி கிடைக்கிற பணம்...இதெல்லாம் ஒரு சராசரி சாதாரண மனுஷிக்குப் போதும். உனக்குப் போதுமா? உன்னாலே இந்தச் சராசரிக்குள் எப்படி வர முடிஞ்சுது? நான் நினைச்சே பார்க்கலே!''

அவள் சற்று நேரம் பேசாமல் இருந்தாள். ''ஸார்.... உங்க கூட நான் நிறைய நாடகங்களை நடிச்சிருக்கேன். என்னைப் பத்தி நீங்க என்ன நினைச்சிருக்கீங்களோ எனக்குத் தெரியாது. ஆனா அன்னிக்கே நான் உங்களைப் பத்தி ஒண்ணு நினைச்சேன். அது பலிச்சிடிச்சு.... நீங்க ஒரு பெரிய கலைஞரா வருவீங்கன்னு நினைச்சேன்!''

''என்னை விட்டுத் தள்ளு. நான் உன்னைப் பத்திப் பேசறேன்.''

''என்னைப் பத்தியா? ஆமா ஸார்... சில பேரைச் சரியாக் கணிக்கிறோம். சில சமயத்திலே கணக்கிலே தப்பு வந்திடுது. செட்டியாரைப் பத்தி நான் தப்புக் கணக்குப் போட்டுட்டேன். அவரோட கலை ஆர்வத்தை நிரந்தரமானதுன்னு நினைச்சுட்டேன். அது கலை ஆர்வமில்லே. தற்காலிகதாக சாந்தின்னு அப்புறமாப் புரிஞ்சுகிட்டேன். அவருக்குச் சினிமா எடுக்கப் பணம் கேட்காத கதாநாயகி, புது முகம் ஒண்ணு தேவைப்பட்டிருக்கு. நான் கிடைச்சேன்., அவர் எதுக்குமே பணம் கொடுக்கலே! 'உன்னை என் சொந்த மனைவி மாதிரி வச்சிருக்கேன்'னு சொன்னதை நம்பினேன். ஆனா அவர், மனைவியைக் கோபுரத்திலும் என்னைக் குப்பை மேட்டிலும்தான் வைத்திருந்தார். நான் அதைப் பற்றிக் கூடக் கவலைப்படவில்லை. நாடகக்காரியான எங்கிட்டயே அவர் நாடகம் ஆடினார். பணத்தையும், பங்களாவையும் பாசத்தையும் மனைவி பேர்லே வைச்சுட்டு எங்கிட்ட நாணயமானவரு நடிச்சமட்டும் காட்டினார்.

''என் சினிமா மோகம் தெளிஞ்சு கண் விழிச்சப்போ முடிக்கப்படாத என்னோட படமும், 'இன்ஸால்வென்ட்' கொடுத்த அவரோட சுயநலமும்தான் மிஞ்சின. தம் சொத்து சுகத்தை யெல்லாம் மனைவி குழந்தைகளுக்கு எழுதி வைச்சுட்டுப் பெரிய நாமத்தை எல்



ஸ்விட்ஜர்லாந்து நாட்டில் உள்ள பாராளுமன்றம் சில ஆண்டுகளுக்கு முன் முதியோர் பென்ஷன் திட்டம் ஒன்றைச் சட்டமாக்கியது. இது மக்கள் முன் வைக்கப்பட நேர்ந்தது. அதுசமயம் இந்தப் பென்ஷன் திட்டம் மக்களால் நிராகரிக்கப்பட்டது. அதற்குக் காரணம் இந்தப் பென்ஷன் திட்டமானது மக்களைச் சோம்பேறிகளாக்கி இளமையில் சேமித்து வைக்கும் பழக்கத்தைத் தடுத்துவிடும் என்ற கருத்தேயாகும். இதிலிருந்து ஸ்விஸ் மக்கள் எந்த அளவுக்குச் சிந்தனை ஆற்றலும் உழைக்கும் ஆர்வமும் உடையவர்களாக இருக்கிறார்கள் என்பது விளங்கும். பின் ஏழை முதியவர்களுக்கு உதவி செய்யப் பழைய சட்டம் தக்க திருத்தங்களுடன், இன்ஷூரன்ஸ் நன்மைகளுடன் இணைத்துப் புதிய சட்டம் இயற்றப்பட்டது.

பி. நாராயணன்

---

லோருக்கும் மொத்தமாக் குழைச்சுப் போட்டுட்டார். அவர் ஒரு வியாபாரி. ஒரு வியாபாரியைக் கணவனா ஏத்துக்கலாம். ஆனா காதலனா ஏத்துக்கலாமா? " நான் போட்ட தப்புக் கணக்கு இதுதான். இதுலே என்ன விசேஷம் தெரியுமா? ஊர் என்ன சொல்லித்துத் தெரியுமா? நாடகக்காரி காசு பணத்தைப் புடிங்கிக்கிட்டு இவரை நடுத்தெருவிலே 'அம்போ'ன்னு விட்டுட்டாளாம்! நான் எங்கே போய் இதை நிரூபிக்கிறது? என்ன பிரயோஜனம்? அந்த 'அரை குறை' படத்தை என் காலடியில் போட்டுவிட்டு என்னை 'முழுசா' தலை முழுகிட்டார். அந்தப் படக் குப்பையை வைச்சுட்டு நான் என்ன செய்ய? பை தைச்சு வேணா விக்கலாம். அப்புறம் பார்த்தேன். இவர் இத்தனை கெட்ட காரியத்திலேயும் ஒரு நல்ல காரியம் செஞ்சிருக்கார். என்னை 'இந்த' உலகுக்கு அறிமுகப்படுத்தி இருக்கார். ராசியில்லாத கதாநாயகியாகி அறிமுகமாகி, 'அண்ணே, அண்ணே' என்று தெரிஞ்சவங்களைக் கெஞ்சி எப்படியோ 'அப்படியும் இப்படியுமா' என் வயத்தைக் கழுவறதுக்கு ஒரு வாழ்க்கையை நான் இங்கேயே தேடிட்டேன். கூட்டத்தோட கூட்டமாக் கலந்துட்டேன். இலக்கிய உணர்வுகள் என்னை வாழ வைக்கும்னு நினைச்சேன். 'யதார்த்தங்கள்'தான் என்னை வாழ வைக்கிறது. சில சமயம் பழைய நாடக வாழ்வுக்கே திரும்பிடலாம்னு கூட நினைப்பேன். ஆனா அங்கே எனக்கு என்ன வரவேற்பு இருக்கும்னு சொல்ல முடியாது. அதே சமயத்துலே நான் ஓஹோன்னு வாழுறதா உங்களை மாதிரி நினைச்சுட்டு இருக்கிறவங்களோட நம்பிக்கையை நான் தகர்க்கவும் விரும்பல்லே.

''இன்னிக்குக் கிடைத்திருக்கிற இந்த ரூபாயிலே 'கமிஷன்' போக எனக்குச் சில ரூபாய்கள் தேறும். இதைக் கொண்டு நான் என் குடும்பத்தை நடத்தணும். என்னோட குழந்தை, வயதான அப்பா, அம்மா அத்தனை பேரோட பசியையும் தணிக்கணும். நாளை இந்தப் பணம் கிடைக்கும்னு உறுதி சொல்ல முடியாது. இதனால இதுலே நான் சேமிக்கவும் செய்யணும்.

''ஸார்... இப்போ என்னோட உள்ளத்திலே இலக்கியங்கள், கலைகள் எல்லாமே 'செத்து'ப் போச்சு ஸார். ஆனா நான் கலை வாழ்வு 'வாழ'றேன்! இதுதான் ஸார் நடிப்பு! இதுக்குத்தான் பணம்!''

'கடகட' வென்று தன் வாழ்வையே கதையாகக் கூறியவள் அதிகமாகப் பேசிவிட்டோமோ என்று பயந்த மாதிரி திடீரென்று அடங்கிப் போனாள். அவனுக்கு அவளுடைய கதை பரிதாபமாக இருந்தது.

அவன் 'ஷூட்டிங்' முடிந்து அன்று ஊர் திரும்புகிறான். மறுபடியும் டப்பிங்குக்காக ஒரே ஒரு நாள் வரவேண்டியிருக்கும். அவ்வளவுதான். கணிசமாக அவனுக்குப் பணம் தந்திருந்தார்கள். அதிலிருந்து ஒரு நூறு ரூபாயை எடுத்து அவளிடம் தரப் போனான்.

''எதுக்கு ஸார்?'' — என்றாள் அவள்.

''பரவாயில்லே. என்னோட எத்தனையோ நாடகத்துலே இலவசமா நடிச்சிருக்கே. அதுக்காக இருக்கட்டும். நான் இன்னிக்கு ஊருக்குப் போகிறேன்.''

''யாராவது பார்த்தா தப்பிதமா நினைச்சுக்கப் போறாங்க ஸார். 'பீல்டுலே' நுழையும்போதே கெட்ட பெயரைச் சம்பாதிச்சுக்காதீங்க. கொடுக்க வேண்டிய எத்தனையோ பேர் என்னை ஏமாத்தியிருக்காங்க. அதைப் பத்தியே நான் கவலைப்படல்லே. நீங்க ஏன் கஷ்டப்படறீங்க? ஊருக்குப் போயிட்டு வாங்க. உங்க அன்பையும், பெருந்தன்மையையும் நான் மறக்கவே மாட்டேன். நன்றி....வரேன்...''

அவள் கிளம்பி விட்டாள். அவள் நடந்து நடந்து சின்னதாகப் போவதைப் பார்த்தான்.

அவள் அந்த நெடிய 'வானில்' ஒரு நீண்ட பயணம் புறப்பட்டது போலிருந்தது.

அவன் பார்த்துக் கொண்டே இருந்தான்.

ஓர் அழகான இனிய சங்கீதமாகப் பரிமளிக்க வேண்டிய அவள் வாழ்வு சுருதி விலகிய ராகமாக, எப்படித் தாறுமாறாக அவலமாகப் போய் விட்டது? சுருதி விலகிய இதுபோன்ற ராகங்கள் எங்கெங்கோ இன்னும் கேட்டுக் கொண்டுதான் இருக்கின்றன.

ஊருக்குக் கிளம்ப வேண்டிய அவசியத்தை உணர்ந்து திடீரென்று விழிப்படைந்தவனாக அவன் அந்த இடத்தை விட்டு எழுந்தான்.

ஓ! ஒரு விதத்தில் பார்த்தால் அவன்கூட சுருதி விலகிய (விலக்கிய) ராகம்தான்!

# நான் கண்ட ரஷ்யா - அகிலன்

இனிமேலும் இவருக்குள் ஒரு சொட்டு மது ரசம் புகுந்தால் இவரைத் தூக்கிக் கொண்டு போக நாலு ஆள் தேட வேண்டியது தான். அதனால்தான் அவர்களும் மறுத்திருக்கிறார்கள். நான் அங்கே சாப்பிடப் போனால் என்னை அவர் விட மாட்டார் போல் தோன்றியது. அவருக்கு மேற்கொண்டு மது வார்க்கச் சொன்னால் அது அநியாயம். அவரிடமிருந்து தப்பினால் போதுமென்று நான் தலையைப் பிய்த்துக் கொண்டு வெளியே ஓடி வந்தேன். 'லிப்டு'க்குள் புகுந்து கொண்டு 18வது மாடிக்குள்ள பொத்தானை அழுத்தினேன். என் அறைக்குள் நுழைந்து குளிருக்கான ஆடைகளைக் களைந்துவிட்டு, வேஷ்டியுடன் . படுக்கையில் விழுந்தேன்.

குளிரும் உறை பனியும் பனிக் காற்றும் கொண்ட பிரதேசத்தில் வாழும் ரஷியர்களுக்கு மதுபானம் என்பது ஓர் அத்யாவசியத் தேவை. அவர்கள் கூட அங்கே கஞ்சா அபின் போன்ற போதைப் பொருட்களைத் தங்கள் நாட்டுக்குள் அனுமதிப்பதில்லை. அங்கு செல்லும் வெளி நாட்டாரும் குளிருக்குப் பாதுகாப்பாகக் குடிப்பதுண்டு. ஆனால் அளவை மீறும்போதுதான் அது தொல்லை தருகிறது.

மறுநாள் பொழுது விடிந்தது. அன்றிரவு ரயிலில் லெனின் கிராடுக்குப் புறப்பட வேண்டியிருந்ததால், மாஸ்கோ தமிழன்பர்களை அன்று பகல் சந்திப்பதாக இருந்தேன். முன்பே தொலை பேசியில் நண்பர் கே. ராமநாதனும் நண்பர் மணி வர்மாவும் என்னைத் தங்கள் வீடுகளுக்குச் சாப்பிடக் கூப்பிட்டிருந்தார்கள். நண்பர் பூர்ணம் சோமசுந்தரம் மணிவர்மா வீட்டு விருந்தில் என்னுடன் கலந்துகொள்வதாகக் கூறியிருந்தார்.

முதலில் நண்பர் ராமநாதன் வந்து சேர்ந்தார். அடுத்து பூர்ணம் சோமசுந்தரம் வந்தார். விரைவில் ரஷ்யத் தமிழன்பர் இப்ராஹிமோவும் வந்து விட்டார். பல ஆண்டு

## ரஷ்யச் சிரிப்பு



"ஹிப்பிக்கு உதவும் பெரிஸ்கோப்!"

✻ சாலைப் போக்குவரத்து — மாஸ்கோ நகர பஸ்கள்

களுக்கு முன்பு அவரை நான் சென்னையில் சந்தித்திருக்கிறேன். தாம் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்ட திருக்குறள் பிரதி ஒன்றையும், குழந்தைகளுக்காகத் தமிழிலிருந்து மொழிபெயர்த்த 'யமப் புரட்டன் கதையும் மற்ற கதைகளும்' என்ற நூலையும் எனக்கு அன்பளிப்பாக வழங்கினார். என்னுடைய 'கொள்ளைக்காரன்' என்ற குறு நாவலை ரஷ்யனில் மொழிபெயர்த்து அச்சுக்குக் கொடுத்திருப்பதாகவும் விரைவில் வெளிவரும் என்றும் தெரிவித்தார்.

திருக்குறளைப் புரட்டிப் பார்த்தேன். முப்பாலில் இருந்தும் முக்கியமான பாக்கள் திரட்டிக் கொடுக்கப்பட்டுள்ளன. உறுதியான தாளில் இடையிடையே படங்களுடன் 192 பக்கங்களில் நூல் வெளியாகியுள்ளது. காலிகோ அட்டை. முன்னுரையில் தமிழ் இலக்கியத்தில் குறளுக்குள்ள இடம் பற்றியும் திருக்குறள் குறித்தும் விளக்கமாகக் கூறியுள்ளார் நண்பர் இப்ராஹிமோவ். 1974ல் வெளியான நூல் இது. 25,000 பிரதிகள் அச்சிட்டிருக்கிறார்கள். விலை ஒரு ரூபிள் பத்து கோபெக். 1977ல் நான் ஆர்மேனியாவுக்குச் சென்றபோது, இந்தப் பதிப்பிலிருந்து குறளை ஆர்மேனிய மொழியில் மொழிபெயர்த்து வருவதாகச் சொன்னது என் நினைவுக்கு வந்தது.

குழந்தைகளுக்கான 'யமப் புரட்டன்' கதையில் அதிகமான வண்ணப் படங்கள்; அதிகமான பக்கங்கள். 50,000 பிரதிகள் வெளியிட்டு, 75 கோபெக்கே (முக்கால் ரூபிள்)



✻ சிறுகக் கட்டிப் பெருக வாழ் என்பதற்கு ஏற்ப மாஸ்கோ நகர வாசிகளின் வசதியான சிறிய குடியிருப்புகள்.

விலை வைத்திருந்தார்கள். குழந்தைகளுக்கான நூல்களைச் சிறந்த முறையில் வெளியிட்டுக் குறைந்த விலையில் விற்பது அங்கே வழக்கம்.

இப்ராஹிமோவ் சொந்தமாகக் கார் வைத்திருந்தார். ரஷ்யாவில் சொந்தமாகக் கார் வைத்துக் கொண்டிருப்பவர்கள் மற்ற மேலை நாடுகளில்உள்ளவர்களை விட மிகவும் குறைவு. இதைக் கொண்டு மேல் நாட்டாரும் அவர்களைப் பின்பற்றுவோரும் ரஷ்யக் குடிமக்களின் பொருளாதார நிலை பற்றிக் குறை கூறுவது எனக்குத் தெரியும். ஆகவே இது பற்றிய தகவல்களை நண்பர் இப்ராஹிமோவிடம் விசாரித்தேன். நண்பர் சிரித்துக் கொண்டே கூறினார்:

''எங்களுக்குக் குறைந்த செலவில், குறைந்த நேரத்தில் பயணம் செய்யப் பல வசதிகள் இருக்கின்றன. பாதாள ரயில், பஸ், மின்சார ரயில், டிராம் என்று பல வாகனங்கள் உண்டு. என்னையே எடுத்துக் கொள்ளுங்கள். என் வீட்டிலிருந்து அது

✻ மேலே உள்ளது போன்ற பல குடியிருப்புக்களை உள்ளடக்கிய பல மாடிக் கட்டிடங்கள்.

லகத்துக்குக் காரில் வரவேண்டுமானால் ஒரு மணி பத்து நிமிடமாகிறது; மற்ற போக்கு வரத்து வாகனங்களில் வரவேண்டுமானால் ஒரு மணி இருபது நிமிடமாகிறது. இந்தப் பத்து நிமிடத்தை மிச்சப்படுத்த நான் மாதம் சுமார் நூறு ரூபிள் காருக்காகச் செலவிட வேண்டும். நீண்ட நேரம் காரை ஓட்டி வருவதால் என் உடல் நலமும் கெட்டுப் போகிறது. குளிர் காலத்தில் காரை இயங்கச் செய்வதில் பல சங்கடங்கள்; செலவுகள்...''

''அப்படியானால் நீங்கள் ஏன் கார் வைத்துக்கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''பழக்கம்தான் காரணம்'' என்று சொல்லி நகைத்தார் நண்பர். 'கார் இங்கே பலருக்கு அத்தியாவசியத் தேவையில்லை. நாகரிகச் சின்னம்தான்' என்று சொல்லாமல் சொல்லி விட்டார்.

காரின் விலை அங்கு 4000 ரூபிளில் இருந்து 10000 ரூபிள் வரை உள்ளது. இப்ராஹீமோவ் வாங்கிய காரின் விலை 8000 ரூபிள். அவரும் அவர் மனைவியும் சேர்ந்து மாதம் சுமார் 800 ரூபிள் சம்பாதிக்கிறார்கள். குடும்பத்தின் மாத வருமானம் போல் பத்து மடங்கு காரின் விலை என்றாலும் மற்ற மேலை நாடுகளை விட அங்கு காரின் விலை அதிகம்தான். காருக்குப் பெயரைப் பதிவு செய்தால் ஓரிரண்டு ஆண்டுகள் காத்திருக்க வேண்டும். இவ்வளவையும் சீர்தூக்கிப் பார்த்து, மலிவான போக்கு வரத்து வசதிகள் இருப்பதால், பலரும் அங்கே சொந்தமாகக் கார் வைத்துக் கொள்ள விரும்புவதில்லை. மேலும் கார்களுக்கு அங்கெல்லாம் 'ஷெட்'டுகள் இடையாது. எல்லோருமே அவரவர் வீடுகளின் அருகே தெருவில்தான் நிறுத்துகிறார்கள். உலகமெங்கும் ஏற்பட்டுள்ள பெட்ரோல் நெருக்கடி அங்கும் தலைகாட்டாமல் இல்லை.

மத்தியானச் சாப்பாடு நண்பர் ராமநாதனின் வீட்டில். என்னையும் ராமநாதனையும் தம் காரில் ராமநாதன் வீட்டில் விட்டு விட்டு விடை பெற்றுக் கொண்டார் இப்ராஹீமோவ். போனவுடன் அவருடைய வீட்டையும், அவருக்கு வேண்டிய மற்றொரு ரஷ்யப் பெண்மணியின் வீட்டையும் சுற்றிப் பார்த்தேன். அறை, பொது அறை (Living Room) படுக்கை அறை எனத் திட்டமிட்டுக் கட்டப் பட்டிருந்தது.

---

முரளி: எங்க முதலாளி அடிக்கடி தொழிலிலே சுத்தம் இருக்கணும் சுத்தம் இருக்கணும்னு சொல்வாரு.
ஸ்ரீதர்: அப்படியா? உங்க முதலாளிக்கு என்ன வியாபாரம்?
முரளி: சோப்பு வியாபாரம்.

ஆர். கோபாலகிருஷ்ணன்



அடித்தளத்தில் கான்க்ரீட்டுடன் நிற்கவில்லை. குளிர் காலத்தில் கான்க்ரீட்டோ மொஸைக்கோ பயன்பட மாட்டா. ஆகவே அதன் மேல் மரப் பலகையைக் கொண்டு தளம் அமைத்திருந்தார்கள். சுற்றுச் சுவர்களைத் தவிர குறுக்கே தடுப்புச் சுவர்கள் எல்லாம் மரச் சுவர்களே. சுவர்களின் மேல் ஒரே சீரான வண்ணக் காகிதங்கள் (Wall paper) ஒட்டியிருந்தார்கள். தரையைத் தண்ணீரால் கழுவி விடும் வழக்கமில்லை. தண்ணீர் புழக்க மெல்லாம் 'பேசி'னுக்குள்ளும், குளியல் தொட்டிக்குள்ளும் முடித்துக் கொள்ள வேண்டியதுதான். இல்லாவிட்டால் மரம் ஊறிப்போய்க் கெட்டு விடும்.

ராமநாதன் வீட்டில் வடை, பாயசம், வறுவல், காய்கறி என்று ஒரு விருந்துச் சாப்பாட்டுக்கே ஏற்பாடு செய்திருந்தார்கள். ஒருகை பார்த்துவிட்டு, அங்கிருந்து டாக்ஸியில் ஓட்டலுக்குத் திரும்பினேன். வெயில் காலம் என்பதால் மத்தியான வேளையில் வேஷ்டி சட்டை அணிந்து கொண்டிருந்தேன். அங்கங்கே மாஸ்கோ வாசிகள் என்னைச் சூழ்ந்துகொண்டு வேடிக்கை பார்க்க முற்பட்டார்கள். ஒருவர் தம் கைச்சாடையால் 'காற்றில் வேஷ்டி அடித்துக் கொண்டுபோய் விட்டால் என்ன செய்வீர்கள்?' என்பது போல் வியப்புடன் விசாரித்தார்.

பிற்பகலில் நண்பர் மாலிகோவுடனும் சந்திர குப்த வித்யாலங்காருடனும் குழந்தைகளுக்கான சாமான்கள் விற்பனை செய்யும் ஒரு கடைக்குச் சென்றோம். சாமான்கள் வாங்க வேண்டும் என்ற நோக்கமில்லை. மக்கள் கூடும் இடங்களையும் கடை கண்ணிகளையும் சுற்றிப் பார்க்க வேண்டும் என்ற ஆவல்தான்.

கோடை காலமானதால் கம்பளித் துணிகளால் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் அவசியம் இன்றி, டெரிலின், பாப்ளின், சில்க் போன்ற பல வண்ணத் துணிகளால் தங்களை அலங்கரித்துக் கொண்டு கலகலப்பாகக் காணப் பட்டார்கள் ரஷ்ய மக்கள். ஆண்களில் பெரும்பாலோர் கோட்டுகள் போட்டுக்கொள்ளாமல் சட்டைகளுடன் காட்சியளித்தார்கள். அங்கு பருத்தித் துணி மிகவும் மலிவு என்றாலும் பலர் அதை அணிந்து கொள்ளவில்லை. ஓரளவு விலை உயர்ந்த ஆடைகளுடனேயே எல்லோரும் காணப்பட்டது அவர்களது பொருளாதாரச் செழிப்பைக் காட்டியது. பெரியவர்களுக்கான உடைகளுடன் ஒப்பிடும்போது, குழந்தைகளுக்கான உடைகள் மலிவாகவே விற்கப்பட்டன. பொம்மைகளும் விளையாட்டுச் சாமான்களும் மிகவும் மலிவுதான்.

மாலை ஆறு மணிக்கு நண்பர் மணி வர்மாவின் வீட்டில் சாப்பாடு. மாஸ்கோ வானொலியின் தமிழ்த் துறைப் பொறுப்பாளர் அவர். இருபத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்பே மாஸ்கோவுக்குச் சென்று அங்கேயே ஒரு ரஷ்யப் பெண்மணியை மணந்து கொண்டு வாழ்க்கையை நடத்தி வருபவர் அவர்.

நண்பர் மணி வர்மா தம் காரை எடுத்துக் கொண்டு ஓட்டலுக்கு வந்து விட்டார். இருவரும் அவர் வீட்டுக்குக் கிளம்பினோம். முன்



Dr. S. R. சிவராஜ்

பாகவே வானொலி நிலையத்திலிருந்து வீட்டுக்குச் சென்று தம்முடைய மனைவி திருமதி லாரா மணிக்குச் சமையலில் உதவி செய்து விட்டு என்னை அழைக்க வந்திருந்தார். அவர் மனைவிக்குத் தமிழ் நாட்டுச் சமையல் முறையில் பயிற்சி இருந்தாலும் அதைக் கச்சிதமாகச் செய்து முடிக்க மணி உதவியிருக்கிறார். அங்கு கணவனுடன் மனைவியும் வேலைக்குச் செல்வதால் வீட்டு வேலைகளிலும் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொண்டால் தான் முடியும். வீட்டுக்கு வேலைக்காரர்கள் கிடைக்க மாட்டார்கள். எல்லா வேலைகளையும் நாம்தான் செய்து கொள்ள வேண்டும்.

மணியின் மகள் கையில் ஓர் அழகான நாய்க்குட்டியுடன் கதவைத் திறந்துவிட்டாள். தமிழ்த் தாயின் பெயரையே 'தமிழ்' என்று சூட்டியுள்ளார். சுமார் பதினைந்து வயதுள்ள பெண். அவர் மனைவி திருமதி லாராவும் வந்து கூப்பிய கரங்களுடன் வரவேற்றார். மணிவர்மா ஒருவகையில் அதிர்ஷ்டக்காரர். அழகும் பண்பாடும் சுறுசுறுப்பும் கொண்ட மனைவியையும் மகளையும் பெற்றிருக்கிறார். இரண்டு பெண்களுமே ஓரளவு ஒல்லியாகத்தான் இருந்தார்கள்.

வீட்டைத் திருமதி லாரா வைத்திருந்த முறை என்னை வியப்புறச் செய்தது. எல்லாச் சாமான்களும் அதனதன் இடத்தில் கச்சிதமாக அடுக்கப்பட்டிருந்தன. மத்தியில் இருந்த நீண்ட வட்ட மேசையில் அன்றலர்ந்த மலர்கள் கலை உணர்வோடு அடுக்கப்பட்டிருந்தன. சுவரோடு பதிக்கப்பட்ட அலமாரிகள், கீழே கம்பள விரிப்புக்கள், சோபாக்கள் எல்லாமே பளிச்சென்று இருந்தன. விருந்தினர் யாரும் வீட்டுக்கு வருவதானால் அவர்களை வரவேற்பதில் ரஷ்யர்கள் மிகுந்த கவனம் செலுத்துவார்கள் என நான் முன்பே கேள்விப் பட்டிருந்தேன். அது முற்றிலும் உண்மைதான்.

கண்ணாடித் தட்டுக்களில் 'ஸ்ட்ராபெர்ரி', 'செர்ரி' முதலிய சின்னஞ் சிறிய பழங்கள் வந்தன. இலந்தைப் பழம் போன்றது செர்ரி. தரையில் குத்துச் செடியில் முளைக்கக்கூடியது ஸ்ட்ரா பெர்ரி. வேனிற்காலமாதலால் பழங்களுக்கும் காய்கறிகளுக்கும் மாஸ்கோவில் இப்போது பஞ்சமிருக்காது.

நண்பர் பூர்ணம் சோமசுந்தரமும் வந்து சேர்ந்தார். அவருடைய வீடும் அருகில்தான் இருக்கிறது. அவரும் பல ஆண்டுகளுக்கு முன்னதாகவே ஒரு ரஷ்யப் பெண்மணியை மணந்து கொண்டு அங்கேயே தங்கிவிட்டவர். முன்னேற்றப் பதிப்பகத்தில் தமிழ் மொழி பெயர்ப்பு வேலைகளைக் கவனித்து வருகிறார். எழுத்தாளர்களான உமாசந்திரன், பூர்ணம் விசுவநாதன் ஆகியோருடைய சகோதரர் அவர். நட்புக்கினியவர்.

மணிவர்மாவும் அவர் மனைவியும் நளபாகச் சமையலில் வல்லவர்கள் என்பது சாப்பாட்டின்போது தெரிந்தது. நாஞ்சில் நாட்டுக்காரரான மணி, முதல் தரமான அவியல் செய்திருந்தார். சாப்பாட்டை முடித்துக் கொண்டு திருமதி மணி எனக்கு அளித்த ஒரு பரிசுப் பொருளைப் பெற்றுக் கொண்டேன். உலகப் புகழ் பெற்ற ஓவியர் ரஃபேல் வரைந்த குழந்தை ஏசுவுடன் உள்ள அன்னை மேரி படத்தின் நகல் அது.

மாஸ்கோவில் உள்ள வீடுகளையும் அவற்றின் சுற்றுப்புறங்களையும் பற்றி நான் இங்கு குறிப்பிட வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. வீடுகள் பல அடுக்கு மாடிகளைக் கொண்டு உயர்ந்தோங்கும் கட்டிடங்களில் உள்ள 'அபார்ட்மெண்ட்'கள் என்றாலும் அவற்றைச் சுற்றிலும் தரையில் வளர்க்கப்பட்டிருக்கும் மரக் கூட்டங்கள் என்னை மிகவும் கவர்ந்தன. வீடுகளின் கண்ணாடி ஜன்னல்கள் வழியே பார்த்தால் உயர்ந்தோங்கி வளரும் மரங்கள் காற்றில் தலையசைத்தாடி நிற்கின்றன. அருகே தெருக்களின் ஓரங்களிலும் வீடுகளைச் சுற்றிலும் ஒரே பசுமை, பசுமை, பசுமை! பங்களாவாசிகளுக்கு மட்டுமே இங்கு கிடைக்கும் அந்தச் சுகத்தை—இந்தக் கண் கொள்ளா அழகை — அங்கே பெரும்பாலான குடிமக்கள் அனுபவிக்கிறார்கள். வீடுகளுக்குப் போய்க் கண்ணாடி ஜன்னலருகே அமர்ந்து விட்டால், யாரும் இயந்திர வேகம் நிறைந்த மாஸ்கோ நகர வாசிகள் என்பதையே மறந்து விடுவார்கள்.

நண்பர்கள் என்னை ஓட்டலுக்குக் கொண்டு வந்து விட்டார்கள். ஓட்டலுக்கு அருகில் தான் லெனின்கிராடுக்குச் செல்லும் ரயில் நிலையம் இருந்தது. இரவு மணி பதினொன்றுக்கு நாங்கள் லெனின்கிராடுக்கு ரயிலேறினோம்.

(தொடரும்)

மணமகன் தெரு வழியே குதிரை மீது ஊர்வலமாக அழைத்து வரப்பட்டான். தலையில் குல்லாய், நெற்றியில் குங்குமம் என்று அழகான மணக் கோலத்தில் இருந்த அவனைச் சுற்றி வாத்தியக் கோஷ்டியினர் சினிமாப் பாடல்களைப் பாடியபடி வந்தனர். பெண்கள் திருமணக் காலத்துப் பாடல்களைப் பாடினர். திருமண அழைப்பிதழ் அழகிய வண்ணங்களில் அச்சடிக்கப்பட்டிருந்தன.

திருமணம் நடந்த பிறகு விருந்தும் பாட்டும் கூத்தும் விடிய விடிய அமர்க்களப்பட்டது. சுமார் மூவாயிரம் ரூபாய் செலவழித்து இந்தத் திருமணத்தை நடத்தியவர் ஒரு நெசவாளி. மணமகன் பெயர்: டான்; மணமகள் பெயர்: லில்லி. இரண்டும் 'வள் வள்' என்று பேசிக்கொண்டன. நாய்கள்தான்! இடம்: ராய்பூர். -நேஷனல் ஹெரால்டு - சாமி



# ராஜாஜி

# வாழ்க்கை வரலாறு

## ராஜ்மோகன் காந்தி

**கா**ங்கிரஸ் அக்கிராசனர் பட்டேலிட மிருந்து ஸி. ஆருக்கு ஒரு கடிதம் வந்தது:

''பாபு சென்று விட்டார். நான் தனித்து விடப்பட்டிருக்கிறேன். என்ன செய்வதென்று தெரியவில்லை. அவர் இல்லாத சமயத்தில் அரசுடன் பேச்சு வார்த்தை நடத்தும் பொறுப்பு முழுவதும் என் மீது சுமத்திருக்கிறது. இம்மாதிரியான காரியத்துக்கு எனக்கு ஆற்றல் போதாது. எனவே சுமை கூடுதலாகத் தெரிகிறது.

''பாபு அயல்நாடு சென்றிருக்கும் சில காலத்துக்கு நீங்கள் என்னுடன் இருந்தால் ரொம்ப நிம்மதியாக இருக்கும் என்று பாபுவிடம் நான் சொன்னேன். அவர் ஒப்புக்கொண்டார். ஆனால் நீங்கள் உங்களது ராஜதானியை விட்டு வர முடியுமா என்பது பற்றிச் சந்தேகப்பட்டார். இருப்பினும் நான் உங்களுக்கு இதுபற்றி எழுத வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.''

இந்தக் கோரிக்கையை ஏற்றுக் கொள்ள முடியாமல் இரு விஷயங்கள் ஸி. ஆரைத் தடுத்தன. தமிழ்நாடு முழுவதும் கள்ளுக் கடை மறியல் பரவியிருந்தது. கண்காணிப்பு இல்லையெனில் அது கலபத்தில் கட்டுக்கோப்பு இழந்து விடலாம். அரசாங்கத்தில் பிடிவாதக்காரப் பிரிவினரின் கரம் பலப்பட்டுப் போகும்.

இரண்டாவதாக, நாமகிரி மிகவும் நோய் வாய்ப்பட்டிருந்தாள். நுரையீரல், நரம்புக் கோளாறுகள் அவளுக்கு இருந்தன. ஜூலையில் அவளை ரங்கூனிலிருந்து ஸி. ஆர். அழைத்து வர வேண்டியிருந்தது. அவளை எப்படித் தனித்து விட முடியும்? என்று அவர் யோசித்தார். எனவே மன்னிக்குமாறு பட்டேலுக்கு எழுதினார்.

''நான் பொறுப்பு ஏற்றுக் கொண்டுள்ள ராஜதானியிலும் சரி, அதே போல் எனது குடும்பத்திலும் சரி, நான் இல்லையென்றால் கவனித்துக் கொள்ள இரண்டாவது ஆசாமி கிடையாது. என்னிடம் நீங்கள் கோபித்துக் கொள்ளக் கூடாது. மன்னிக்க வேண்டும்.''

திருச்செங்கோடு ஆசிரமமே தொடர்ந்து அவரது மையக் கேந்திரமாக விளங்கியது. அங்கிருந்தபடியே அவர் 'யங் இந்தியா'வைக் கவனித்துக் கொண்டார். முன் போலவே அது ஆமதாபாத்தில் பிரசுரமாகியது. வேறு பல அம்சங்களிலும் ஸி. ஆர். கவனம் செலுத்தினார்.

அவற்றுள் முன்போலவே கதர்ப்பணியும் ஒன்று. கைத்தறியாளர் கையால் நூற்ற நூலை விட ஆலைகளில் தயாரான சீரான நூலையே விரும்பினார்கள். இது கதருக்கு முட்டுக்கட்டையாக விளங்கியது. எனவே ஆலைகள் கனமான நூல் தயாரிக்கக் கூடாது என வற்புறுத்துவது என்று முடிவாகியது.

காங்கிரஸ் பகிஷ்காரம் செய்யும் என்ற அச்சமானது வற்புறுத்தவே மதுரையிலும் கோவையிலும் இருந்த பிரிட்டிஷாருக்குச் சொந்தமான செல்வாக்கு மிக்க ஆலைகள் உள்படப் பல ஆலைகள் இதற்கு ஒப்புக்கொண்டன. கைத்தறியாளர்கள் இதனால் கையால் நூற்கப்பட்ட நூலை ஏற்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளானார்கள்.

கனமான நூல் தயாரிப்பதை நிறுத்தி விட்ட போதிலும் பிரிட்டிஷாருக்குச் சொந்தமான ஆலைகள் எல்லாவற்றையும் அவை பிரிட்டிஷாருக்குச் சொந்தமானவை என்ற ஒரே காரணத்துக்காகப் பகிஷ்கரிக்க வேண்டும் என்று ஓர் அபிப்பிராயம் நிலவியது. ஆனால் அது இனச் சார்பான ஒரு முடிவு என்பதால் கொள்கை அளவில் ஸி. ஆர். இதனை எதிர்த்தார். மேலும் இந்த ஆலைகள் ஆயிரக்கணக்கான கைத்தறிகளுக்கு நூல் வழங்கி வந்தன என்பதும் பகிஷ்காரத்துக்கு எதிரான ஒரு வாதமாக இருந்தது.

ஸி. ஆரின் கருத்துமிக்க கவனத்தைக் கவர்ந்த மற்றொரு அம்சம் உப்பு. இது சம்பந்தமாக ஏற்பட்டிருந்த சமரச உடன்பாடு குறித்து அரசு மறு சிந்தனை செய்து கொண்டிருப்பதாகத் தோன்றியது.

ராமநாதபுரம் ஜில்லாவில் இரு தாலுக்காக்களில் உப்பு சம்பந்தமாகத் தரப்பட்டிருந்த சலுகை திடுமென வாபஸ் பெறப்பட்டது; ஏராளமான உப்பு பெருவாரியாக அள்ளப்பட்டு தொலைதூரக் கிராமங்களுக்குக் கொண்டு செல்லப்படுகின்றன என்பது இதற்குக் கூறப்பட்ட காரணம். இதனை ஆட்சேபித்து அரசுக்கு அறிக்கை விட்டார் ஸி. ஆர். இது மாதிரியான ஒரு குற்றச்சாட்டை முன்கூட்டியே அரசு கூறி, அதனை மறுக்கவும் சரியல்ல என நிரூபிக்கவும் மக்களுக்கு வாய்ப்பளித்திருக்க வேண்டும். இந்த வாய்ப்பைக் கொடுக்காமல் சலுகையை வாபஸ் பெற்றது தவறு என்றார்.

ஸி. ஆரின் கவனத்தையும் நேரத்தையும் ஆக்ரமித்துக் கொண்ட மூன்றாவது அம்சம் மதுவிலக்குப் பணி. மதுவினால் ஏற்படும் தீமையைத் திகைப்பூட்டும் விதமாக உணர்த்த அவர் ஒரு சித்திரம் தயாரித்



✖ வல்லபாய் படேல்

னார்: மதுவிலக்குப் பற்றிய ஒரு பிரசுரமும் வெளியிட்டார்.

இந்தப் பிரசுரத்தில் கர்னல் ஆர். மக்காரிஸனின் ஒரு கருத்தை வி. ஆர். வெளியிட்டார். அரசுத் தொடர்புடைய கூனூர் பாஸ்டியூர் நிறுவனத்தின் இயக்குனர் அவர். அவரது அறிக்கை மது ஒரு சத்துணவு என்று கூறப்பட்டு வந்ததைப் பொய்யாக்கியது. காங்கிரஸ் பிரசுரம் ஒன்றில் தம் பெயர் இடம் பெற ஒப்புக் கொள்வதால் விஞ்ஞானியாகிய அவருக்கு நஷ்டம் ஏற்படலாமேயன்றி எவ்வித லாபமும் இல்லை. எனவே அவரது சொல்லுக்கு மதிப்பு மிகுந்தது. வி. ஆருக்கு அவர் எழுதினார்: ''நான் உங்களுக்கோ அல்லது மனப்பூர்வமாக மதுவிலக்குப் பணியில் ஈடுபட்டுள்ள வேறு தொண்டர்களுக்கோ பொது நலனை முன்னிட்டு எப்போதும் உதவத் தயாராக இருக்கிறேன்.''

மதுவிலக்குப் பிரசாரம் என்று வந்துவிட்டால் வி. ஆர். கட்சி எல்லைகளைக் கடக்கத் தயங்க மாட்டார். தாழ்த்தப்பட்டோருக்காகப் போராடிய டாக்டர் அம்பேத்கார் காங்கிரஸ் எதிர்ப்பாளராக இருந்தபோதிலும் அவரைப் பயன்படுத்திக் கொண்டார். பம்பாயில் அம்பேத்கார் அங்கத்தினராக இருந்த, அரசு அங்கீகாரம் பெற்ற ஒரு கமிட்டி, தனது அறிக்கையில், 'மதுக் கடைகளை மூடிவிடுமாறு அரசாங்கத்தை நீங்கள் ஏன் கேட்கக் கூடாது' என்று தீண்டாதார் தப்பாமல் வினவுவதாகக் கூறியிருந்தது. 'டாக்டர் அம்பேத்காரும் கொடிய மதுப் பழக்கமும்' என்ற தலைப்பில் தாம் எழுதிய கட்டுரை ஒன்றில் வி. ஆர். இந்தக் கேள்வியைப் பிரபலப்படுத்தினார்.

அவர் மிகக் கடுமையான வார்த்தைகளை உபயோகித்தது, தனது மரங்களைக் கள் இறக்கக் குத்தகைக்கு விட்டிருந்த ஒரு கோயிலைப் பற்றி எழுதும்போதுதான். 'இந்த வியாபாரம் வடிகட்டின பாபத்தில் பங்கேற்பதாகும். இந்தப் பாபத்தின் சம்பளம் விவசாய வருமானமல்ல, மதத்தின் மரணமே!' என்றார் வி. ஆர்.

தேவதாஸி முறை பற்றித் தமது கருத்தை வெளியிடவும் ஒரு வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது: ''திருமணம் செய்து கொள்ளாமல் கன்னியராக வாழ்வதாகப் பிரமாணம் எடுத்துக் கொண்டாலும் வழக்கத்தில் தாசிகளாக ஒப்புக் கொள்ளப்படுகிற பெண் வேலைக்காரர்களைக் கோயிலில் நியமனம் செய்யும் பழக்கத்தை நான் வெறுக்கிறேன்.''

தீண்டாமையை எதிர்த்தும் அவர் கணை தொடுத்தார். 'எல்லாத் தெருக்களும் எல்லாக் கோயில்களும் எல்லாக் குடிநீர் வசதிகளும் தீண்டாதார் எனக் கருதப்படுகிற எல்லோருக்கும் திறந்து விடப்பட வேண்டும்' என்று ஜூன் மாதத்தில் எழுப்பப்பட்ட ஒரு கோரிக்கையில் வி. ஆரும் சேர்ந்து கொண்டார். டிசம்பரில் மலையாளப் பிரதேசத்திலுள்ள குருவாயூர் சென்றார். அங்கு நூற்றுக்கணக்கான ஆண்டுகளாகத் தீண்டாதார் அனுமதிக்கப்படாதிருந்த பிரசித்தி பெற்ற ஆலயத்தை எல்லோருக்கும் திறந்து விட மேற்கொள்ளப்பட்ட சாத்துவிக முயற்சிக்கு உதவினார்.

தீண்டாமை ஒழிப்புப் போராட்டத்தைச் சுதந்திரம் அடைந்த பிறகு வைத்துக் கொள்ளலாம் என்று சிலர் ஒத்திப்போடச் சொன்னார்கள். வி. ஆர். எதிர்த்தார்:

''தங்களது நிலத்தின் சொத்துரிமை பற்றியோ, அனுபவ பாத்தியதை குறித்தோ சண்டை போட்டுக் கொண்டிருக்கும் யாரேனும் தங்கள் வழக்கைச் சுதந்திரப் போராட்டம் முடியும்வரை ஒத்திப் போடத் தயாராயிருக்கிறார்களா என்று நான் அறிய விரும்புகிறேன்.''

சுதந்திரம் கேட்பதற்கு முன்பாக இந்தியா சிறுபான்மையினர் பிரச்னையைத் தீர்த்துக் கொண்டு வரட்டும் என்று கூறும் ஆங்கிலேயருக்கும் அவர் பதில் வைத்திருந்தார்:

''துப்பாக்கிச் சங்கீதம் ஒலிக்க தென் ஆப்பிரிக்கா பூரண சுதந்திரம் கேட்டபோது ஆங்கிலேயர் அவர்களிடம் சிறுபான்மையினர், தீண்டாதார் பிரச்னைகளையெல்லாம் முதலில் தீர்த்துக் கொண்டு பிறகு வாருங்கள். அப்போதுதான் நீங்கள் சுதந்திர சாசனம் கோருவது நியாயமாகும் என்று கூறவில்லையே!''

வி. ஆர். மௌனமாக இருந்த நேரம் மிகவும் அரிது. லண்டன் மகாநாடு நடந்த போதிலும், காந்தி இர்வின் ஒப்பந்தம் கையெழுத்தாகி இருந்த போதிலும், அவர் பெரு பிரிட்டிஷ் ஆட்சியைச் சும்மா விடவில்லை. பொருளாதார சீர்குலைவு காரணமாக அரசர் தமது சம்பளத்தைக் குறைக்கும்படி கோரியிருந்தார். இந்தியாவில் உள்ள அதிகாரிகள் இதைக் கேட்டு எப்படி நடந்து கொள்வார்கள் என வி. ஆர். எழுதினார்.

(தொடரும்)

தமிழாக்கம்: வெ. ராஜேந்திரன்

---




பிராங்பர்ட் தபால் நிலையத்தில் ஒரு மலைப் பாம்பு தபால் பார்சல் ஒன்றிலிருந்து வெளி வந்து தபால் நிலையச் சிப்பந்தியைக் கடித்து விட்டது. அவர் மருத்துவமனையில் சிகிச்சை பெற்றார். நல்ல வேளை அது விஷப் பாம்பு வகையைச் சேர்ந்ததல்ல.

பவேரியாவில் உள்ள பாம்பு வியாபாரி ஒருவர் பெர்லினில் உள்ள வேறு ஒரு பாம்பு வியாபாரிக்குத் தபால் பார்சல் மூலம் இந்தப் பாம்பை அனுப்பினார். அந்தப் பார்சல் ஃபிராங்பர்ட் வந்தபோது பார்சலை உடைத்துக் கொண்டு பாம்பு வெளியே வந்து விட்டது. பிராங்ஃபர்ட் மிருகக் காட்சி சாலை மருத்துவர் செய்தி அறிந்து வந்து பாம்பைப் பிடித்து மீண்டும் அதைச் சரியாகப் பார்சல் செய்த பின் பெர்லினுக்கு அனுப்பிவிட்டனர்.

''ஜெர்மன் நியூஸி''லிருந்து
அ. இராமச்சந்திரன்

# மருந்தடிமைப் பழக்கம்: மருத்துவர்களும் காரணம்!





அன்புள்ள ''கல்கி'' ஆசிரியருக்கு,

கல்கி 12-8-'79 இதழில் ''மருந்தடிமைப் பழக்கம்'' பேட்டியின் தொடர்ச்சியாகக் கீழ்க்காணும் செய்தியை வெளியிடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

மருந்தடிமைப் பழக்கம் (Drug addiction) உண்டாக மருத்துவர்களும் ஒரு காரணமாவார்கள். வயிற்று வலி, நீர்ச்சுருக்கு, அறுவைச் சிகிச்சைக்குப் பின் உண்டாகும் வலி இவைகளுக்கு பெதிடின், மார்பின் போன்ற ஊசிகளைச் செலுத்திவிடுகின்றனர். ஒரு வாரம் அல்லது பத்து நாட்கள் கொடுத்த பிறகு நோயாளி அம்மருந்துக்கு அடிமையாகிவிடுகிறார். இதேபோல் மருத்துவக் கல்லூரி மாணவர்களும் விளையாட்டாக இந்த ஊசியை இரண்டொரு தடவை செலுத்திக்கொள்கின்றனர். பிறகு இப்பழக்கத்துக்கு அடிமையாகித் தாமே ஊசி போட்டுக்கொள்ளவும் செய்கின்றனர். என்னுடைய நோயாளி ஒருவர் பெதிடின் ஊசியைக் கழுத்தில் உள்ள Jugular vein க்குள் கண்ணாடியில் பார்த்துக் கொண்டே செலுத்திக் கொள்வார். இவற்றைத் தவிர Vesparax Mandrax மாத்திரைகள், கஞ்சா, அபினி, மது வகைகளுக்கு அடிமையாவதும் உண்டு.

இவர்கள் யாவரும் இப்பழக்கம் கொடியது, வேலைத் திறமையைப் பாதித்து அழிக்கிறது என்று நன்கு உணர்கின்றனர். எனினும் அவர்கள் மனத்தில், இந்த மருந்து இன்றி உயிர் தரிக்காது என்பது போன்ற விபரீத உறுதி எண்ணம் (obsession) தோன்றி இம்மருந்தைத் திருடியாவது அடையச் செய்கிறது. மன உறுதியால் இப்பழக்கத்தைத் தவிர்க்கலாம். ஆயினும் மருந்தை நிறுத்துவதால் உண்டாகும் உடல் கோளாறுகள் (Withdrawal Symptoms) இவர்களை மிகவும் துன்புறுத்துகின்றன.

மன நோய்ச் சிகிச்சை முறை நாட்பட்டது. நோயாளிக்கு உடலாலும், மனத்தாலும், பொது வாழ்விலும் அசௌகரியங்கள் ஏற்படுத்துவதாக உள்ளது.

மூளையின் உட்புறத்தில் Cingulam என்று ஒரு பகுதி உள்ளது. நுணுக்கமான ஒரு கருவியின் உதவியால் இந்த Cingulam என்ற பகுதியில் பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட ஒரு மருந்தைச் செலுத்தி இக் கொடிய பழக்கத்தை ஒழித்துவிட முடியும். எக்ஸ்ரே பட உதவி கொண்டு குறித்த பகுதியின் ஆழ, அகல, நீள அளவுகளைக் கணித்து மண்டை ஓட்டில் ஒரு சிறு துளை மூலம் இந்த அறுவைச் சிகிச்சையைச் செய்துவிடலாம். இம்முறை, மருந்து - மது வகை அடிமைப் பழக்கங்களுக்கு நல்ல பலன்களை விரைவாக அளிக்கிறது. நோயாளிக்கு வேறொரு உடல் கோளாறோ, மனக் கோளாறோ ஏற்படுவதில்லை. இத்தகைய வசதி மதுரை எர்ஸ்கின் மருத்துவ மனையில் உள்ளது.



ஆர். நாராயணன்

அறுவை மருத்துவர், நரம்பியல் பிரிவு,
அரசினர் எர்ஸ்கின் மருத்துவமனை, மதுரை-20

# சிவகுமார் 101

## 81 – 90

**சொர்க்கம் நரகம்:** 1973ம் ஆண்டு என நினைக்கிறேன். நடிகை ஜெயசுதா ஒரு நாள் என்னிடம் அழகிய முகவெட்டுக் கொண்ட ஒடிசலான ஒரு பெண்ணை அறிமுகப்படுத்தினார். அன்று எனது விசிறியாக அறிமுகப்படுத்தப்பட்ட பெண்தான் இன்று இப்படத்தில் எனக்கு ஜோடியாக நடித்தார். நாலு வருடங்களில் எவ்வளவு மாற்றங்கள்! அவர்தான் நீரஜா. புரியவில்லையா? இன்றைய படாபட் ஜெயலட்சுமி.

**துணையிருப்பாள் மீனாட்சி:** எம்.கே. ராதா, புஷ்பவல்லி ஆகியோர் நடித்து ஜெமினியில் தயாரிக்கப்பட்ட படத்தின் மறு உருவம் இது. இதில் நானும் சுஜாதாவும் இணைந்து நடித்தோம். காலங்கள் மாறினாலும் நடுத்தர வர்க்கத்தின் பிரச்னைகள் மாறவில்லை என்று இந்தப் படத்தின் வெற்றிகரமான ஓட்டம் காட்டிற்று. வெள்ளி விழா கண்ட ''அன்னக் கிளி''க்குப் பிறகு நானும் சுஜாதாவும் நடித்து வெளி வந்ததால் இப்படத்துக்கு நல்ல வரவேற்பு இருந்தது. அது சரி, ஜெமினி தயாரித்த அந்தப் பழைய படத்தின் பெயர் என்ன தெரியுமா? அதுதான் ''சம்சாரம்''!

**புவனா ஒரு கேள்விக் குறி:** கதாநாயகனாக நடித்து வந்த நான் இப்படத்தில் வில்லன் வேடம் ஏற்றேன்! அதுவரை வில்லன் வேஷமே தரித்து வந்த ரஜனி காந்த் இப்படத்தில் கதாநாயகன் வேஷம் ஏற்றார். பல்வேறு வகையான கடிதங்கள் எனக்கு வந்தன. இனி இப்படிப்பட்ட வேஷங்கள் ஏற்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டனர் பலர். காரணம், இதில் நான் பேசும் ஒரு வசனம் தான். ''குழந்தை இறந்தாலும் பரவாயில்லை. அது எனக்குச்சொந்தமாக வேண்டும்; இல்லாவிடில் மருந்தைத் தரமாட்டேன்.''

**ஆட்டுக்கார அலமேலு:** மதிப்புக்குரிய தேவர் அவர்களாலேயே சரியாகக் கணிக்க முடியாத படமாக விளங்கியது இது. அவரிடம் பேசும்போது கூறினார்: ''நீ ஒன்றும் கவலைப்படாதே சிவா. இந்தப் படத்தை அடிச்சுப் பிடிச்சு முடிச்சு வெளியிட்டுடுவோம். அடுத்து நல்ல படமாத் தயாரிப்போம்!'' ஆனால் நடந்தது என்ன? 1977ம் வருடம் வசூலிலே ஒரு ரிகார்டை ஏற்படுத்திய படமாகிவிட்டது இது!

**ஸ்ரீ கிருஷ்ண லீலா:** இனி பத்து வருடங்களுக்கேனும் புராணப் படங்களில் நடிப்பதில்லை என்று என்னை முடிவெடுக்க வைத்து விட்ட படம் இது. நான் கிட்டத் தட்ட எல்லா அவதாரங்களையும் ஏற்று நடித்து விட்டேன். என்றாலும் கிருஷ்ண லீலாவின் தோல்விக்குப் பிறகு என்னதான் சிறந்தது உயர்ந்தது என்று வாதிட்டாலும் புத்திசாலித்தனமாக மக்களுக்குப் பிடிக்காததைச் செய்யாமல் ஒதுங்கிக் கொள்வதுதான் நல்லது என்றே தோன்றுகிறது.



✖ ஆட்டுக்கார அலமேலுவில் ஜெயமாலினியுடன்

✖ சொர்க்கம் நரகம் படத்தில் சிவகுமார் படாபட் ஜெயலக்ஷ்மி





**பெருமைக்குரியவள் :** காலத்தின் வேகத்தோடு சினிமாவும் கைகோத்துக் கொண்டு ஓட வேண்டும். கடந்த கால உத்திகள் படப்பிடிப்பு முறைகள் இன்று ரசிக்காது. குறிப்பாகக் காதலுக்கு இது மிகவும் பொருந்தும். காதலை வெளிப் படுத்தும் முறைகள் காலத்துக்கேற்ப மாறுவதால் அதற்கேற்ப நாமும் மாற் றத்துடன் படம் பிடிக்க வேண்டாமா? அப்பொழுதுதானே ரசிகர்களைக் கவர முடியும்?

**மாரியம்மன் திருவிழா :** கல்கியில் வெளியான ''அம்மன் தாலி'' என்ற ஒரு சிறு கதையை நாடகமாக்கினேம். அப்பொழுதே எனக்குத் தெரியும். திரைப்பட உலகுக்கு ஒரு சிறந்த எழுத் தாளர் கிடைப்பார் என்று. அவ்வாறே ''அவன் ஒரு தொடர் கதை'' மூலம் தமிழ்த் திரைப் பட உலகுக்குள் நுழைந்தார். அவர் அடுத்து அம்மன் தாலியும் மாரியம்மன் திருவிழா என்ற பெயரில் திரைப் படமாயிற்று. இப் படத்தின் வசனம் பல காட்சிகளை மக்கள் மனத்தில் தங்க வைத்தது என்று சொல்லலாம். தோல்விகளைக் கண்டு துவளாமல் தொடர்ந்து முயற்சி செய்தால் திரைப் பட உல கில் தனி இடத்தை அவர் பெறுவது நிச்சயம். கவி சுப்பிரமண்யத்தின் புதல்வர் எம். எஸ். பெருமாளைத்தான் குறிப்பிடுகிறேன்.

பேட்டி: ''சலன்''

**பெண்ணைச் சொல்லிக் குற்றமில்லை:** பெரிய மனிதர்கள் தங்கள் குடும்பத்தைப் பற்றியும் நினைக்கவேண்டும்; மனைவியின் மென் மையான உணர்வுகளை மதிக்கக் கற்கவேண் டும் என்ற நல்ல கருத்தைக் கூறும் படம். ஆனல் ஓடவில்லையே ஏன்?

* ஸ்ரீ கிருஷ்ணலீலாவில் ஜெயலலிதாவுடன்
* சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு படத்தில் ஸ்ரீ தேவி யுடன்

**துர்க்கா தேவி :** இப்படத்தின் விளம் பரம், பெயர் எல்லாவற்றிலும் வேறொரு வெற்றிப் படத்தின் சாயல் இருந்தது. இருக்க வேண்டும் என்பதற்காகவே துர்க்கையின் படத்தையும் விளம்பரத்தில் போட்டார்கள். மசாலாக் கதைகள் படமானல் எப்பொழு துமே படுதோல்வியைத் தழுவுவதில்லை. தப்பித்துக் கொள்ளும் அதற்கு இப்படம் ஒரு சான்று.

**சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு :** நல்ல கதைகள் கொண்டவையே வெற்றிப் படங்கள் என்ற மரபை உருவாக்கின பத்ர காளி, என்னதான் முடிவு, புவன ஒரு கேள் விக் குறி போன்றவை. ஆனல் இப்படிப்பட்ட வெற்றிப் படங்களின் கதைகளைத் தந்தவர் தோல்வியையும் சந்தித்த படம் இதுதான். தோல்விக்குக் காரணம்? சினிமாவின் அளா வல் (Influence) இவரது எழுத்தின் மீது படிந்ததுதான். அந்தக் கதாசிரியர்... தெரிந் திருக்குமே? ''மகரிஷி''தான்.



# இந்த மாதத்து வருமானம் இதோ என் கையில். இதை எனக்கு சம்பாதித்துக் கொடுத்தது யார் தெரியுமா ?

யூகோபாங்க்கில் உள்ள எனது ஃபிக்சட் டெபாசிட்.

ஐந்தாண்டுகளுக்கு முன், நான் வேலையிலிருந்து ஓய்வு பெறும்பொழுது உத்தியோகம் ஒன்றுமில்லாமல் சம்பாதிப்பது எப்படி என்று யோசித்தேன்.

யூகோபாங்க்கிடம் ஆலோசனை கேட்டேன்.

அவர்கள், "யோசிக்கவே வேண்டாம் உங்களுடைய ஆயுட்கால சேமிப்பே உங்களுக்கு சம்பாதித்துக் கொடுக்க முடியும்" என்று கூறி, என்னுடைய ப்ராவிடண்ட் ஃபண்ட், க்ராட்யூடி, மற்றும் இதர சேமிப்புகளை, யூகோபாங்க் ஃபிக்சட் டெபாசிட் திட்டத்தின் கீழ் சேர்க்கும்படி வழி காட்டினர்.

9% வரை உயர்ந்த வட்டி கிடைப்பதால், ஒவ்வொருமாதமும் எனக்கு கணிசமான வருமானம் கிடைத்துக் கொண்டேயிருக்கும்.

இப்பொழுது ஒவ்வொரு மாதமும் நான் யூகோபாங்கிலிருந்து எனது "வருமானத்தை"ப் பெற்றுக் கொள்வதுடன் வருங்கால பாதுகாப்பை பற்றி ஒருவித கவலையும் இன்றி நம்பிக்கையுடன் இருக்கிறேன்.

## யூகோபாங்க்

### அளிக்கும் லாபகரமான டெபாஸிட் திட்டங்கள்

**சேவிங்ஸ் பாங்க் அகௌண்ட்ஸ் திட்டம்**
**ஃபிக்ஸட் டெபாசிட் திட்டம்**
**டெபாஸிட் ஸெர்ட்டிபிகேட் திட்டம்**
**ரெகரிங் டெபாசிட் திட்டம்**
**க்ரோ யுவர் மணி ஸ்கீம்**
**டைலி ஸேவிங் ஸ்கீம்**
**மாதாந்திர பென்ஷன் திட்டம்**



**யுனைடெட் கமர்ஷியல் பாங்க்**
**உங்கள் அருகாமையில் உள்ள வசதியான பாங்க்**

UCO/CAS-4/79 TAM




# "இந்த இனிய மாலை நேரத்தை இழக்கிவிட்டேனே!"

தன் பாய் ஃபிரண்டுடன் தினம் மாலைப் பொழுதைக் கழிக்கும் ப்ரீதாவிடம் அவரை ஒரு நாள் முழுதும் பார்க்கக் கூடாது என்று நான் சொன்னதும், அவளுக்குச் சற்றுத் திகைப்பாகத்தான் இருந்தது. ''என்ன சார்! இப்படி ஒரு குண்டைத் தூக்கிப் போடுகிறீர்களே!'' என்று சொன்னாலும் சவாலை ஏற்கச் சம்மதித்தாள்.

அப்போது காலை நேரம்.

''சங்கர் ரொம்ப இனிமையானவர். அடக்கமானவரும் கூட. சிரித்துச் சிரித்து அவர் பேசுவதை நினைக்கவே மனம் துள்ளுகிறது. அவருக்கு EA International Airport பாடலென்றால் உயிர். அவரை நினைத்தவாறு இப்போது அப்பாடலைக் கிடாரில் வாசிக்கிறேன்'' என்று உதடுகள் ஹம்மிங் செய்ய மெல்லிய விரல்களால் கிடாரை வாசிக்க ஆரம்பித்தாள். பாட்டு முடிந்த பிறகு ''அவருக்குப் பிடிக்கும்'' என்று கூறியவாறு ஒவ்வொரு விரல் நகத்துக்கும் ஒவ்வொரு வண்ணச் சாயத்தைப் பூசத் தொடங்கினாள் ப்ரீத்!

மதியம் உணவு வேளையில் என்னோடு பேசிக் கொண்டிருந்தாலும் அவள் மனம் வேறு எதையோ எண்ணத் தொடங்கி விட்டது. உணவுகூட அவளுக்குப் பிடித்த Yorkshire Pudding தான். ஆனால் ருசிக்கவில்லை.

மாலை வந்தவுடன் ப்ரீத்துக்கு மனம் நிலைகொள்ளவில்லை. ஒரே பரபரப்பு. கைகளைப் பிசைந்து கொண்டாள். ஆனாலும் சிரமப்பட்டுத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். எனக்கே வியப்பாக இருந்தது; பரிதாபமாகவும் இருந்தது அவளைப் பார்க்க.

தான் வரைந்த ஓவியங்களை எனக்குக் காட்டினாள். சங்கர் படத்தைத் தானே வரையத் தொடங்கினாள். படம் முடிந்தது. ஆனால் மீசைதான் சற்றுக் கோணலாகப் போய்விட்டது. ப்ரீத்துக்கே தவறு தெரிந்தது. அவ்வளவுதான்! ஒரேயடியாகச் சிரிக்க ஆரம்பித்து விட்டாள்.

போன் மணி ஒலிக்க ஆரம்பித்தது. யார் என்று அவளுக்குத் தெரியும். இருந்தாலும் என்னையும் போனையும் மாறி மாறிப் பார்த்தவாறு தன் உணர்ச்சிகளுக்குத் தடை விதித்தாள்.

பேச்சு, மத்தியில் யார் அடுத்த பிரதமராகப் போகிறார் என்பதிலிருந்து தற்போதைய தமிழ் சினிமா வரை பலவாறு வளர்ந்தது. தொடர்ந்து பல நடிக நடிகையரைப் போல் நடித்துக் காட்ட ஆரம்பித்தாள்.

இரவு நெருங்கியதும், ''சார், நான் ஜெயித்து விட்டேன். அப்பாடா! இந்த ஒரு நாள் என்னால் நிச்சயமாக மறக்க முடியாது. நமக்கு ரொம்பப் பிடித்த ஒருவரைச் சந்திக்காமலிருக்க எவ்வளவு சிரமப்பட வேண்டியதாயிருக்கிறது!'' என்று சொல்லி என்னை அனுப்பினாள் ப்ரீதா.

அனுபவம்: ''சிக்கி'' படம்: உத்ரா

---

கமலேஸ்வருக்கு நாலரை மாதங்கள் சிறைத் தண்டனை விதித்து விட்டார்கள். ஒரு தப்பும் செய்யாத தன் மகனை ஏன் தண்டிக்க வேண்டும் என்று அப்பா சூர்யா பாலிக்குப் புரியவில்லை. விசாரித்தபோது அவருக்குத் தோதான பதில் கிடைக்கவில்லை. மத்திய பிரதேச உயர்நீதி மன்றம் அவர் செய்திருந்த இரண்டு மனுக்களை சுத்தமாக நிராகரித்து விட்டது. சுப்ரீம் கோர்ட் கூட அவர் விண்ணப்பத்தை ஏற்கவில்லை. அப்பா மனம் தளரவில்லை. இறுதி முயற்சியாக, மகனைக் குற்றவாளியாக்கித் தண்டனை அளித்த கோர்ட்டுக்கே போனார். கேஸ் கட்டுகளைப் புரட்டினார். உண்மையைக் கண்டு பிடித்தார். குற்றம் சாட்டப்பட்டுத் தண்டிக்கப் பட வேண்டியது கமலேஸ்வர்தான். ஆனால் தன் மகன் கமலேஸ்வர் இல்லை; விஷ்ணுதாஸ் என்பவரின் மகன்! சிறு அலுவலகத் தவறுதான்! அப்பாடா!

-தி டைம்ஸ் ஆப் இந்தியா

—ராமு





# ஸ்வீட் சிங்கப்பூர் பட விமர்சனம்

தமிழர்களாகிய நாம் 'கன்னடமும் கவின் தெலுங்கும், தமிழே, உன் உதரத்திலிருந்து உதித்தது' என்று மார்தட்டிக்கொள்ளலாம். ஆனால் கன்னடத் தெலுங்குப் படங்களிலிருந்து 'தழுவல்' செய்வது இப்போது தமிழ்த் திரைப்பட உலகில் அதிகமாகிவிட்டது! 'ஸ்வீட் சிங்கப்பூர்' தயாரிப்புக்கு வி. வி. ராஜேந்திரன் கன்னடத்தை நாடியிருக்கிறார்!

ஜேம்ஸ்பாண்ட் சண்டை, அடி, குத்து குங்பூ, கராத்தே, சிங்கப்பூர் நகரக் காட்சிகள் கள்ளக் கடத்தல், ஒருவரையொருவர் அழிக்கும் சதித் திட்டம், கடைசியில் ஹீரோவுக்கு வெற்றி, வில்லன்கள் அழிவு ஆகியன அடங்கிய இந்த 'ஸ்வீட்' அடிக்கடி நாம் சுவைத்துப் பார்த்த ஒன்றுதான் என்றாலும் இந்தச் சரக்கு மாஸ்டரின் தயாரிப்பில் தனிச் சுவையோடுதான் விளங்குகிறது!

ஸ்வீட் சிங்கப்பூரின் கதாநாயகன் விஷ்ணுவர்த்தன். இவர் மூன்று சீன கராத்தே, குங்பூ சண்டைக்காரர்களிடம் தைரியமாக மோதிச் சமாளிக்கிறார். காதலியின் தந்தை கோபிநாத ராவ் இவரைச் சதித் திட்டத்தில் மூழ்கடித்துச் சிங்கப்பூருக்கு விரட்டினாலும் அவரது மகள் தாரா (கன்னட மஞ்சுளா) காதலின் வேகத்தில் சிங்கப்பூருக்கே வந்து உறுதுணையாக இருக்கிறாள். அப்படி அவள் துணிவு காட்டினால்தானே சிங்கப்பூர்க் காட்சிகளுக்கு மத்தியில் அவர்கள் இருவரும் வேண்டிய அளவு கொட்டம் அடிக்கலாம்!

மழலைத் தமிழில் கொஞ்சி, பெனினாவாக நடிக்கும் சீனப் பெண் தித்திப்பில் மிஞ்சி விட்டாள்! திகட்டாத 'ஸ்வீட்!'

கள்ளக் கடத்தல் தலைவனின் கைப்பொம்மையாக ஹீரோவின் தந்தை லோகநாத் அவஸ்தைப்படுகிறார்! நம்மையும் அவஸ்தைப்படுத்துகிறார்.

ஸ்வீட் சிங்கப்பூர் சினிமாஸ்கோப்பில் வண்ணப் படமாகத் தயாராகியுள்ளது. டி.வி. ராஜாராமின் சிறப்பான காமிரா வேலை பிரமிக்க வைக்கிறது. 'ஸ்வீட் மட்டும் சாப்பிட்டால் போதுமா? காரம் வேண்டுமே' என்பதற்காக ஹீரோவின் நண்பன் துவாரகேஷ் ஸஸ்பென்ஸும் சிறிதளவு ஹாஸ்யமும் வழங்குகிறார்.

'ஸ்வீட் சிங்கப்பூர்' கிடுகிடுவென்று வேகமாக ஓடி உங்களைத் திணற அடித்தால் டைரக்டரின் சாமர்த்தியம், காமிராமேன் கைவண்ணம், ஸ்டண்ட்மேனின் சாகஸங்கள் அனைத்துக்கும் சேர்த்து 'நன்றி' சொல்லி விடலாம். மொத்தத்தில்: பாதாம் அல்வாவுக்கு ஏங்கியவனுக்குக் காசி அல்வா கிடைத்தாற்போல!

—குண்டுமணி



**ஒரு டுடோரியல் கல்லூரி விளம்பரம் :**

எங்கள் கல்லூரியின் சிறப்பான அம்சம் ஒவ்வொரு வகுப்பிலும் கிரிக்கெட் காமென்டரி கேட்கும் மாணவர்களுக்காக, பாக்கெட் ரேடியோவுடன் பின் பெஞ்சியில் விசேஷ இருப்பிட வசதி செய்து தரப்படும்.

—ஜி. நடராஜன்

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras - 600 032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 60 மலேயக் காசு

பெண்கள் தங்கள் மனோபாவங்களை
அநேக அழகான வழிகளில் வெளிப்படுத்துகிறார்கள்.

விமல்
அவற்றில்
ஒன்று!

VIMAL
A RELIANCE PRODUCT

100% பாலியெஸ்டர் புடவைகள்

உங்களுடைய விமல் விற்பனையாளரிடம் கேளுங்கள்: ஸரிகா, புலைவன் ஜிவெல், ராயல் லேஸ்,
பாலியெஸ்டர் டீயூலீ கிரேப்.
அத்துடன் ஸில்க் ஸிலியோர், ஃப்ளீட் ஸைாஃப்டி, கோல்டன் ரிக், லேஸோல்டா மற்றும் ஃப்ரென்ச் சிஃபான்.

® is the Registered trademark of Reliance Textile Industries Ltd.

VIMAL 55/79 TAM